# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை



சிலம்பு-ருரு] வள்ளுவர் ஆண்டு-உ0கக, ஆவணி Sep, '80 [பரல்-க

# செந்தமிழ்ச் செல்வி

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---


## "செந்தமிழ்ச் செல்வி"

### விளம்பரக் கட்டணம்

### (ADVERTISEMENT TARIFF)

| | | |
|---|---|---|
| மேலட்டை 4ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Back Wrapper 4th Page) | ரூ. | 100/- |
| மேலட்டை 3ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Wrapper 3rd Page) | ரூ. | 80/- |
| முழுப் பக்கம் (உள்ளே) (Full Page-Inside) | ரூ. | 60/- |
| அரைப் பக்கம் (உள்ளே) (Half Page-Inside) | ரூ. | 40/- |

## "செந்தமிழ்ச் செல்வி"

### ஆண்டுக் கையொப்பம்

### (Subscription Rates)

உள்நாடு ரூ. 12 00 வெளிநாடு ரூ. 20 00

### ஆயுள் கையொப்பம்

உள்நாடு ரூ. 120 00 வெளிநாடு ரூ. 200 00

Vol. LV(௫௫) 1980—81



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

ஐம்பத்தைந்தாவது சிலம்பு

திருவள்ளுவர் ஆண்டு
உ௦கக—உ௦கஉ

The South India Saiva Siddhanta Works

 Publishing Society, Tinnevelly, Ltd.,
Madras-1 Tirunelveli-6. Madurai-1. Coimbatore-1,
Kumbakonam-1. Tiruchirappalli-2.

# ‘செந்தமிழ்ச் செல்வி’

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்





# உள்ளுறை

# படங்கள்





# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ருரு | திருவள்ளுவர் ஆண்டு உ௦கக, ஆவணி<br>செப்டம்பர் 1980 | பரல் க |
|---|---|---|

## மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளைக்கு மதுரையில் நகரமைப்பு

"நீராரும் கடலுடுத்த" என்னும் திருப்பாடல் தமிழ் நிலமெங்கும் இந் நாளில் களிநடம் புரியக் கண்டு மகிழ்கிறோம். இப் பாடலை இயற்றிய பெருந்திருவாளர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் என்பதையும், இப் பாடல் அவர் இயற்றிய மனோன்மணீய நாடகத்தில் உள்ள தமிழ்த் தெய்வ வணக்கக் கலிப்பாவின் முதல்தரவு என்பதையும்கற்றோர் நன்கு அறிவர்.



பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் புதுநெறி புதுக்கிய புத்துலகச் சிற்பி! "துறை தோறும் தொண்டு செய்வாய் துடித் தெழுந்தே" என்னும் பாவேந்தர் மணிமொழிக்கு முன்னோடியாக இருந்து "துறைத் தீந்தமிழ்" புதுக்கி வளர்த்த புகழாளர்! "உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே" என்னும் தொல்லாசிரியர் மொழிக்கு வாய்த்த நல்லாசிரியச் சான்றாய் இலங்கியவர்!

மலையாள மண்ணிலே பிறந்த செந்தமிழர் சுந்தரம் பிள்ளை பண்டைத் தமிழ் நிலமே இன்றைய மலையாளம் என்பதை நில

நாட்டுவார்போல ஆலப்புழையில் தோன்றினர். தம் இருப்பிடத்தைக் "கொடுமலையாளக் குடியிருப்புடையேன்" என்று குறிப்பிட்டுள்ளார். இக் குறிப்பிலேயே காலனி (Colony) என வழங்கும் ஆங்கிலச் சொல்லுக்கு அமைந்த அருமையான தமிழ்க் கலைச் சொல்லாகக் 'குடியிருப்பு' என்பதைப் பயன்படுத்தியுள்ளார். தமிழகத்தில் பழைய குடியிருப்புடன், புதுக்குடியிருப்புகள் எத்தனை எத்தனை தோன்றுகின்றன! ஒன்றேனும் சுந்தரனார் பெயர் விளங்கும் குடியிருப்பாகத் திகழத் திட்டமிட வேண்டாவா? குடியிருப்புக் கொடைச் செல்வருக்கு நாம் ஒரு குடியிருப்புப் பெயர் சூட்டி நன்றி பாராட்ட வேண்டாவா?

நாட்டுக்கும் மொழிக்கும் இனத்துக்கும் தொண்டு செய்தாரை நாளும் மறவாமல் போற்றுதல் நன்றியுணர்ந்தவர் செய்கை என்பதை நாடறியும்; நானிலமும் அறியும்! அவ்வகையில் சுந்தரனார் தமிழினத்துக்குச் செய்துள்ள தொண்டு ஈடும் எடுப்பும் அற்றதாகும்! முத்தமிழ் என்னும் பெயர் பெற்றிருந்தும், மூன்றில் ஒன்றாய நாடகத் தமிழ் இல்லையே என்னும் குறைபாட்டை உணர்ந்து, "இவ் வில்லாமையை இல்லாமையாகச் செய்வேன்" எனத் துணிந்து 'மனோன்மணீய' நாடகம் இயற்றிய பெருந்தகை சுந்தரனார்! அவர்தம் ஆர்வமும் அரும்பணித் திறமும் வருங்கால மக்களுக்குத் தூண்டலும் துலங்கலுமாக விளங்கித் தொண்டில் தலைப்படுத்துதற்கு அடிப்படையாக அவர் பெயரை நிலை பெறுத்துதல் நம் கடமையாம்!

பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் தந்தையார் பெருமாள் பிள்ளை; தாயார் மாடத்தியம்மாள். இவர்களுக்கு நெடுநாள்களாகப் பிள்ளைப் பேறு வாய்க்கவில்லை. பண்டைப் பழம்பதியும், தண்டமிழ்ச் சங்கம் கண்டதுமாகிய தமிழ் மதுரையை அடைந்து சோமசுந்தரப் பெருமானை வழிபட்டு வரம் வேண்டினர். அவ் வரத்தின் பயனால் பிறந்த செல்வக் குழந்தைக்கு அப் பெருமான் பெயராகிய சுந்தரப் பேர் சூட்டி மகிழ்ந்தனர். சுந்தரத் தமிழுக்கு மேலும் சுந்தரப் பேரொளி காட்டவந்த பெருமகனார்க்குத் தமிழ்ச் சுந்தரர் பேர் வாய்த்தது திருவருட் குறிப்பேயாம்.

1855ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 9ஆம் நாள் சுந்தரனார் பிறந்தார். ஐந்தாம் அகவையிலே பள்ளியில் சேர்ந்தார். பள்ளிக் கல்வியொடு தமிழ்ப் புலமை நலம் நிரம்பிய தம் தந்தையார் வழியே அரிய தமிழ் நூல்களை முறையே பாடம் கேட்டார். பன்னிரண்டாம் அகவையிலே நற்றமிழ்ப் புலமை எய்தினர். பின்னர் ஆங்கிலப் பள்ளியில் பயின்று பத்தாம் வகுப்பில் முதல் வகுப்பில் முதல்வ

ராகத் தேறி அரசு உதவித் தொகை பெற்ருர். திருவனந்தை அரசர் கல்லூரியில் சேர்ந்து இளங்கலைப் பட்டம் பெற்ருர். இவர் பட்டம் பெற்ற கல்லூரியிலேயே, இவர் திறங் கண்டுணர்ந்த முதல்வரால் வரலாறும் அறிவு நூலும் கற்பிக்கும் ஆசிரியராக அமர்த்தப்பெற்ருர். பின்னர் நெல்லை இந்துக் கல்லூரி முதல்வ ராகவும், திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் அறிவுநூல் துறைத் தலைவராகவும் பணிசெய்து, செய்த பணிகளுக்குப் பெருமை சேர்ப்பித்தார்.

சுந்தரஞர் கல்வி யார்வம் அளவில் அடங்காதது. ஆசிரியப் பணிபுரிந்துகொண்டே முதுகலைப் பட்டம் பெற்ருர்; சட்டக் கல்வி கற்றுத் தேர்ந்தார். கல்வெட்டு, வரலாறு ஆகியவற்றில் மிக ஈடுபட்டு ஆராய்ந்தார். இவ்வாராய்ச்சித் திறனல் ஞானசம்பந்தர் கால ஆராய்ச்சி, திருவாங்கூர் பண்டை மன்னர் கால ஆராய்ச்சி, நூற்றெகை விளக்கம் என்னும் சீரிய நூல்கள் செந்தமிழர்க்கு வாய்த்தன.

பேராசிரியர் அவர்கள் நெல்லையில் பணிசெய்த காலையில் திருவருட் செயலால் கோடகநல்லூர் சுந்தர முனிவர் தொடர்பு வாய்த்தது. அவரை மெய்ப்பொருட் குருவாகக் கொண்டு மெய்ப் பொருள் ஆய்வில் தலை நின்ருர். சுந்தரர் திருவருளால் பிறந்த சுந்தரப் பெருமகஞர்க்குச் சுந்தர முனிவர் குருவாக வாய்த்தது திருவருட் பேறேயாம்! சுந்தர முனிவர், மனேன்மணீய நாடகத்தில் பாண்டிய வேந்தனின் குலகுருவாகிய பாத்திரப் படைப்பாகத் திகழ்கிருர்.

முதல் அங்கம் முதல் களத்திலேயே,

> சுந்தர முனிவா வந்தனம் வந்தனம்
> எனுமொலி யேசிறந் தெழுந்தது கேண்மின்

என்று நகரவர் போற்ற, மன்னன் வரவேற்கக் காட்டுகிருர். பின்னரும் 'சுந்தர முனிவன் சிந்துர அடியைச்' சிறப்பிக்கிருர். சுந்தரஞர் கொண்ட நன்றியுணர்வு நாடு அறிந்து போற்றத் தக்கதாம்.

பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் புலமைச் சிறப்புணர்ந்த இலண்டன் வரலாற்ருராய்ச்சிக் கழகத்தார் F. R. H. S. என்னும் பட்டத்தையும், ஆசியா தொடர்பான ஆராய்ச்சிக் கழகத்தார் M. R. A. S. என்னும் பட்டத்தையும், சென்னை அரசியலார் இராய்பகதூர் என்னும் பட்டத்தையும் வழங்கினர். சென்னைப் பல்கலைக் கழகம் தன் ஆட்சிக்குழு உறுப்பினராகவும், தேர்வான

ராகவும் கொண்டு சிறப்புப் பெற்றது. நாற்பத்திரண்டு ஆண்டுகளே வாழ்ந்தும் நூற்றுண்டு வாழ்வினரும் செய்தற்கு அரிய செழும்பணி புரிந்தவர் செம்மல் சுந்தரனுர் ஆவர்!

செயற்கரிய பணி செய்த இப் பெருமகனுர்க்கு நாம் செய்ய வேண்டிய கடப்பாடு என்ன? அவர் புகழ் வளர்த்தலும், அவர் பெயர் நிறுவிப் போற்றிக் காத்தலுமேயன்றே! நம் செயல் எதிர்கால மக்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்க நாம் இச் செயல் களில் தலைப்படுதல் வேண்டுமன்றே!

தமிழ் வளர்த்த மதுரையில் அண்மையில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெற உள்ளது. இந்த மகிழ்ச்சியான பொழுதிலே மதுரைச் சுந்தரப் பெருமான் பேரருளால் பிறந்து அவர் பெயரே தாங்கி அருந்தமிழ்த் தொண்டு செய்த பெருமக னுர்க்கு நிலையான நினைவுச் சின்னம் எழுப்புதல் வேண்டத் தக்கதாம். அரசினுல் புதிதாக எழுப்பப் பெறும் ஒரு குடியிருப்புக்குப் பேராசிரியர் சுந்தரனுர் பெயர் சூட்டுதலும், ஆங்கு அவர்சிலை நாட்டுதலும், அவர் பெயரால் ஒரு மணி மண்டபம் எழுப்பி நிலைத்த தமிழ்த் தொண்டு புரிதலும் வேண்டத்தக்கனவாம்.

திருக்கழுக்குன்றத்தில் கோயில் கொண்டிருக்கும் வேதாசலப் பெருமான் திருவருளால் பிறந்தவரே சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகளார். அவர் பெயரால் சென்னைத் தாம்பரத்திற்கும் செங்கற்பட்டிற்கும் இடையே திருக்கழுக் குன்றத்துக்குச் செல்லும் வழியிலுள்ள காட்டாங் குளத்தூரில், ஒரு நூருயிரம் மக்கள் எல்லா வாய்ப்புகளுடனும் 'வாழும் வகையில் குடியிருப்பு, தொழில் துறை, வணிகத் துறை, கல்வி நிலையம், கலைக் கூடங்கள், மருத்துவ விடுதிகள், சிற்றுண்டிச் சாலைகள், கூட்டுறவு வணிக நிலையங்கள், பேருந்து நிலையங்கள் இன்ன பிற வாய்ப்புகள் நிரம்பியதாய் நகரொன்று உருவாகி வருகின்றது. இதனை நினைத்துப் பெருமைப்பட்டு, இச் சீரிய செயலைச் செய்விக்கும் அரசையும், அரசு சார் நிறுவனங்களையும், அலுவலர் களையும் பாராட்டும் அதே பொழுதில், அடிகளாரின் கெழுதகை நண்பினரும், உழுவலன்பினருமாகிய பேராசிரியர் சுந்தரனுர்க்கு நீடுபுகழ் மதுரையில் நினைவு சிறக்கும் நகரமைப்பு ஒன்றை எழுப்பிப் பெருமையுற வேண்டிக் கொள்கிறேம்.

"நன்மையே யாவும் நன்மையாய் முடியின்"

—மனேன்மணீயம்.

———

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச் சொற்கள்

[ஞா. தேவநேயன்]

## 22. திருப்பு

உல்—உல—உலம்=உருட்சி, திரட்சி. உலம்வருதல்—உலமருதல்=சுழலுதல். உலம்—உலக்கை=உருண்டு நீண்ட தடி. உல—உலவு. உலவுதல்=திரிதல், சுற்றுதல். உலவு—உறவு.

உல—உலா=சுற்றித்திரிகை, நகர்சுற்றிவருகை.

உலவு—உலகு=சுற்றிவரும் அல்லது உருண்ட கோள்.

உலகு—உலகம்=பேருலகு. 'அம்' பெருமைப் பொருட் பின்னொட்டு. உலவு—உலாவு—உராவு.

உல்—உள்—உழி. உழிதல்=அலைதல்.

உள்—உழல், உழல்தல்=சுழல்தல். உழல்—உழலை= 1. செக்குலக்கை 2. சுழலும் குறுக்குமரம். உழற்றி=சுழற்சி. உழன்றி=மாட்டின் கழுத்திற் கட்டும் சுழல்தடி.

உல்—துல்—துலம்—துளம்—துடம்—தடம்=வளைவு.

"தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" (தொல். உரி. 23)

துல்—துர்—துறு—(துறள்)—துறடு= பற்றுக்குறடு, வளை கோல்.

துறடு—துறட்டி=இடையன் அலகு(அலக்கு).

துறட்டி—தோட்டி=அங்குசம்.

துற—திற—திறம்பு=திறம்புதல்=மாறுபடுதல்.

துர்—திர்—திரி. திரிதல்=வேறுபடுதல், ஒன்று இன்னொன்றாக மாறுதல், சுற்றுதல், அலைதல். திரித்தல்=வேறுபடுத்தல், வேறுபடு சொல்லமைத்தல், முறுக்குதல், சுழற்றுதல். திரி=விளக்கெரிக்கத் திரிக்கப்படும் துணிக்கிழிசல் அல்லது முறுக்கு நூற் கயிறு. திரிசொல்=வேறுபடுத்தியமைத்த சொல். திரிபன்றி= சுழலும் சக்கரப் பன்றியுரு.

திரிகல் = சுற்றி மாவரைக்குங் கல். திரி—திரிகை = திரிகல்.

திரி—திரிகு—திரிகி (யாழ். அக,) = குயவன் சக்கரம்.

திரிகி—திகிரி = வட்டவடிவு, சக்கரம், வண்டி, தேர், சக்கரப் படைக்கலம், உருளை, கதிரவன், அரசன் கட்டளை.

திரிசடை = முறுக்குண்ட சடை.

திரிதாடி = முறுக்குண்ட தாடி.

திரிதரவு = சாய்வு, அசைவு.

திரி—திரிபு = வேறுபாடு, சொற்புணர்ச்சி வேறுபாடு, முதலெழுத்து வேறுபடும் மடக்கு, வீடுபேற்றிற் கிடையூருன மாறுபாட்டுணர்வு.

திரிபுக்காட்சி = மாறுபாட்டுணர்வு.

திரி—திரிய (நி. கா. வி. எ.) = திரும்ப.

திரியக்கோடல் = ஒன்றை மற்ருென்ருக மாறிக்கருதுகை.

திரியவிடுதல் = சொத்து முதலியவற்றைப் பிறர்பேரில் மாற்றுதல்.

திரியவும் = திரும்பவும்.

திரிசில்(?)—திரில் = குயவன் சக்கரம்.

தித்திரிப்பு = புனைசுருட்டு.

திர்—திரு—திருகு. திருகுதல் (செ. கு. வி.) = கோணுதல், முறுகுதல், பின்னுதல், மாறுபடுதல்.]

(செ. குன்ருவி.) = கோணுவித்தல், முறுக்குதல், பின்னுதல், பறித்தல். திருகு = கோணல், முறுக்கு. திருகணி, சுரி, திருகு மரை, மாறுபாடு, புரட்டு, ஏமாற்று.

திருகல் முறுகல் = திருகலும் முறுகலும்.

திருகணை = புரிமணை. திருகுமணி = திருகரிவாள்மணை.

திருகல்—திருகலி = நுனி வளைந்த பனை.

திருகாணி = அணியின் திருகுமரை, முறுக்காணி. திரு கம்மல், திருகுகள்ளி, திருகுகொம்பு, திருகுப்பூ, (கொண்டை

திருகு) திருகுமரம், திருகுமரை, திருகுவட்டம் (நூல் சுற்றும் கருவி வகை) திருகுவில்லை, திருகுளி என்பன திருகிய நிலையை அல்லது திருகும் செயலைக் குறிக்கும் பொருட்பெயர்கள்.

திருகுசொல்லி = கரவாகப் பேசுபவள். திருகுதாளம் = புரட்டு. திருகுமுகம் = கோணிய முகம், சினமுகம், பாராமுகம்,

திருகு—திருகி. தேங்காய் திருகி = தேங்காய் திருகும் கருவி.

திருகு—திருக்கு (பெ) கோணல், வளைவு முறுக்கு, அணித் திருகு, மாறுபாடு, வஞ்சனை, வலக்காரம். தித்திருக்கு = பெரும் புரட்டு. திருக்குதல் = முறுக்குதல். திருக்கி = முறுக்கி. திருகு, திருக்கு—*L.* **torquere,** to twist.

*E.* **torque,** n. Neckiace of twisted metal, esp. of ancient gauls and Britons.

*E.* **torquate,** a. with ring of peculiar colour or texture of hair or plumage round neck. (of animals.)

E. **trick,** n. Fraudulent device or stratagem, *ME*. f. *of* dial **trique,** *OF* **triche, trichier,** decieve.

திர்—திரு—திரும்—திருமு. திரும்—திரும்பு.

திருமுதல் = திரும்புதல். திரும்புதல் = சாய்தல், விலகுதல், வளைதல், மீளுதல், மாறுதல், திரும்புகால் = மீளுஞ்சமையம்.

திரும்ப(நி. கா. வி. எ.) = சாய, மீள, மறுபடி. திரும்பத் திரும்ப = மேன்மேலும். திரும்பவும் = மீண்டும்.

திரும்பி = சாய்வது, மீள்வது. ஞாயிறு திரும்பி = கதிரவனை நோக்கிச் சாயும் பூ (சூரிய காந்தி).

திரும்பு — திருப்பு (பி. வி,). திருப்புதல் = சாய்த்தல், வளைத்தல், மறுபுறங் காட்டுதல், ஏட்டின் பக்கத்தைத் தள்ளுதல், புரட்டுதல், திரும்பக் கொடுத்தல், திரும்பி வரச் செய்தல், திரும்பிப் போகச் செய்தல், மறுமுறை படித்தல் அல்லது படிப்பித்தல், முறுக்குதல், மாற்றுதல், மொழிபெயர்த்தல்;

திருப்பு—திருப்பம் = திரும்புகை, திசை மாறுகை, நிலைமை மாறுகை,

திருப்பு—திருப்பி = புரட்டி, முறுக்காணி திருப்பி.

திரும்.—*E*.**turn**, move round from a centre or axis, change from one side to another, take new direction, more to other side of, cause to go, change in nature, translate.

*OE*. **tyrnan**, **turnian**, *OF*. **turner**, **torner**, f *L*. **tornare** f. *Gk*. **tornos**

*E*. **attorney**, n. *ME*. f. *OF*. **atorne** p. p. of **atorner** (a) to, **torner** turn.)

*E*. *return*, *ME*. **retorner**, **returner** f. Rom. re (**tornare**, **turn**).

ம்—ன், போலி. ஒ. நோ.: கடம்—கடன். இரும் (இரும்பு) —iron.

*E*. **tornado**, n. Violent storm of small extent with whirling winds *Sp*. **tornada**, thunder. storm, **tornar**, to **turn**.

*E*. **tourney**, *ME* f. *OF*. **tornei**, **torneier** f. *Rom*. **tornidiare** f. *L*. **tornus**, a turn.

*E*. **tournament**,, *ME*. f. *OF*. **torneiement**, torneier, tourney.

*E*. *tourniquet*. n. Bandage etc. for stopping flow of blood through artery by compression effected with screw of twisted bar, (?)

திருப்பு—திருப்பி—*E*. **trope**, n. figurative use of a word. *L*. *F*. *Gk*. **tropos**, turn, way, trope, **trepo**, turn.

*E*. **trophy**, 1. Arms etc. of vanquished enemy set up on field of battle or elsewhere to commemorate victory. *F*. **trophee** f. *L*. **trop(h)aeum** f. *Gk*. **tropaion** (**trope**, rout f. **trepo**, turn)

வெற்றியரசன் தோற்ற அரசனைப் போர்க்களத்தினின்று திருப்பியடித்தல் அல்லது துரத்துதல் என்னும் அடிப்படைக் கருத்துக் கொண்டதே trophy என்னுஞ் சொல். இதே கருத்தை விளையாட்டுப் போருக்கும் ஏற்றிக் கூறுவனவே tourney tournament என்னுஞ் சொற்களும் என அறிக.

*E. Trophy,* 2. Thing made or kept or awarded as memorial of victory in tournament.

E. **tropic,** n. "Parallel of latitude 23° 27' north (Tropic of Cancer) or south (Tropic of Capricorn) of the equator (the **Tropics,** region between these); each of the two Corresponding circles on celestial sphere where sun appears to turn after reaching greatest destination." *ME.* f. *L.* f. *Gk.* **tropikos (trope,** turning f. **trepo,** turn.)

*E. tropical,* a. OF, peculiar to, suggestive of the **tropics.**

*E.* **tropism,** n. (Biol,) Turning of (part of) organism in particular direction in response to external stimulus. (f. second element of heliotropism)

*E. heliotrope* n. Herb or shrub of genus **Heliotropium** with fragrant purple flowers; f. *L.* f. *Gk.* **heliotropion,** plant turning flowers to the sun; **helios,** sun, **tropos** f. **trepo, turn.**

ஒ. நோ: ஞாயிறு திரும்பி = சூரியகாந்தி.

*E. tropology,* n. Figurative use of words; figurative interpretation esp. of the Scriptures; f. *LL.* f. *Gk.* **tropologia, tropos** f. **trepo** turn, **logy,** suffix forming nouns denoting sciences.

அணியியலில், சொற்களின் பொருள்கள் பல்வேறு வகையில் திரிக்கவும் திருப்பவும் படுதல் காண்க.

*E. tropopause* n. Interface between troposphere and stratosphere.

*E. troposphere,* n. Layer of atmospheric air extending about seven miles upwards from earth's surface, in which temperature falls with increasing height. *Gk.* **tropos,** turning + sphere.

*E strophanthin.* n. White crystaline poisonous glucoside extracted from various species of the genus Strophanthus of tropical plants and used as a heart—tonic; *f.* mod. *L.*

**strophanthus** f. *Gk.* **strophos**, twisted cord+anthos, flower.

*E.* **strophe**, n. (Lines recited during) turn made in dancing by ancient Greek chorus; *GK.* strophe, lit. turning, **strepho**, turn.

*E. antistrophe*, f. *Gk.* **antistropho**, turn against.

E. *apostrophe*, n. f. *Gk. apo*, away from, **strepho**, to turn away.

*E catastrophe*, n. Sudden or widespread or noteworthy disaster; even subverting system of things; disastrous end, ruin; denouement of drama; f. L. **catastropha** f. *Gk.* **cata**, down, **strophe**, turning, **strepho**, turn. para tort (twist), tortus (crooked), tortum (wrong), tortor (twister) முதலிய இலத்தீனச் சொற்களும், இலத்தீனத்தினின்று கொண்ட கடன் சொல்லாகக் கூறப்படும் tort என்னும் ஆங்கிலச் சொல்லும், அதினின்று திரிந்த tortion, tortuous, torture, tortrix முதலிய தனிச் சொற்களும், torticollis என்னும் கூட்டுச் சொல்லும், contort, distort, extort, retort முதலிய முன்னொட்டுப் பெற்ற திரிசொற்களும், திரித்தல் அல்லது திருகற் பொருளையே அடிப் படையாகக் கொண்டுள்ளமையின், திரி என்னும் வேர்ச் சொல்லி னின்று திரிந்தனவாகக், கொள்ளத் தக்கனவே.

---

## 'செல்வி' வாசகர்க்கு ஓர் அறிவிப்பு

டா. (Dr.) தெ. பொ. மீ. அவர்கள் எழுதிய 'தமிழிலக் கணத்தில் அயன்மொழியமைப்புகள்' என்னும் 330 பக்கத் திரிபா ராய்ச்சி நூலைச் சிறுசிறு பகுதியாகச் 'செல்வி'யில் மறுப்பின், முற்று முடிய மூவாண்டாகுமாதலாலும், அதனால் தொகுப்புநோக்குக் கெடுமாதலாலும், தமிழுக்குப் பெருந்தீங்கு விளைக்கும் கடுநச்சுப் பகுதிகள் இறுதியிலிருப்பதனாலும், அவற்றை விரைந்து மறுத் தொழிக்க வேண்டுமாதலாலும், மெய்யன்பர் சிலர் விருப்பிற் கிணங்கியும், மறுப்பு முழுதும் ஓர் எதிர் நூலாகவே வெளியிடத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. ஆதலால், தெ. பொ. மீ.யின் திரிபா ராய்ச்சி மறுப்புக் கட்டுரைகள் இனிச் 'செல்வி'யில் தொடரா.

இங்ஙனம்
தண்டமிழ்த் தொண்டன்
**ஞா. தேவநேயன்**

# மொழியகழ்வாராய்ச்சியால் வெளிப்படும் உண்மைகள்

[இரா. மதிவாணன் க. மு.]

கடலகழ்வாராய்ச்சி, நிலவகழ்வாராய்ச்சி என்பனவற்றை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். வரலாற்றுக் கெட்டாத தொல்பழங்கால வரலாற்றுண்மைகளைப் புதைபொருளாராய்ச்சிகளும் செப்பேடுகளும் காட்டா. அவற்றைத் தமிழ் போன்ற தொன்மொழிகளில் மேற்கொள்ளும் மொழியகழ்வாராய்ச்சிகள் நிறுவ வல்லன. உருசிய நாட்டு மாந்த நூல் வல்லுநரும் தொல்பொருள் ஆய்வாளருமாகிய கோந்தரதோவ் என்பவர், "The Linguist has to tell the Historians a lot" என்று குறிப்பிடுகிறார். மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணரைப் போன்று சொற்பிறப்பியல் (Etymology) ஆய்வில் ஈடுபடும் மொழி நூலறிஞர்கள் மொழியகழ்வாராய்ச்சியில் ஈடுபடத் தகுதியுடையோராவர். தொல்பொருளாய்வாளர், புதை பொருளாய்வாளர், கடலகழ்வாய்வாளர் ஆகியோர் கண்டறியாத அறப்பழங்கால வரலாற்றுப் பின்னணிகளை மொழியகழ்வாராய்ச்சி யாளர்களால் விளக்கிக் கூறமுடியும். ஆதலால், மொழியகழ் வாராய்ச்சி (Language archaeology) உலக அரங்கில் தக்க இடத்தைப் பெற்றுவிட்டது.

மொழியகழ்வாராய்ச்சியால், குறிப்பிட்ட மொழியினர் உலகின் எப்பகுதியில் எந்தெந்தக் கால வெல்லையில் வாழ்ந்துள்ளனர் என்று கூறமுடியும். ஆங்கில மொழியில்,

'அவரை மனங்குளிர வரவேற்றோம்' எனக் கூறுமிடத்து, 'we gave him a warm welcome' என்று கூறுகிறோம். warm என்னும் வெம்மையைக் குறித்த சொல் ஆங்கிலர்க்கு இனிதாகவும் நமக்குச் சினமூட்டுவதாகவுமிருக்கிறது. வெம்மை (warm) இனிமைப் பொருள் தருதலை வைத்துக்கொண்டே ஆங்கில மொழியினர் குளிர் நாட்டில் வாழ்ந்துவரும் இனத்தினர் எனவும் வெப்பத்தை விரும்புபவர்கள் எனவும் மொழியகழ்வாராய்ச்சியாளர் முடிவு கட்டிவிடுவர்.

தமிழ்மொழியில், 'குளிரக் கூறினன்' என்னுந் தொடர் இனிமையைப் புலப்படுத்துவதிலிருந்து பழந்தமிழர்கள் தொன்று

தொட்டு வெப்ப நாட்டில் வாழ்ந்து வருபவர் என்று வரையறுக்கலாம். ஆயின், தமிழில் ஆங்கிலத்தைப் போல வெம்மையும் இனிமைப் பொருளில் வருவதைப் பழந் தமிழிலக்கியங்களில் காண்கிறோம். 'வெய்யோள்'—விரும்பத்தக்கவள் என்னுஞ் சொல் லாட்சியை நோக்கும் மொழியகழ்வாராய்ச்சியாளர் மிகப் பழங்காலத் தமிழினத்தவர் குளிர் நாட்டிலும் வாழ்ந்திருக்க வேண்டும். வெப்ப நாட்டிலும் வாழ்ந்திருக்க வேண்டும் என்னும் முடிவுக்கு வருகின்றனர். இதன் மூலம் இன்றைய தமிழகம் கடல் கொண்ட குமரி நாட்டில் தென்னாப்பிரிக்க மடகாசுகர் தீவுக்குத் தென்பால் வரை பரவியிருந்தது என்னும் உண்மை தெற்றெனத் தெளிவாகிறது. மொழியகழ்வாராய்ச்சியின் கண்டுபிடிப்புகள், தொல்பொருள் புதைபொருள், மாந்தவியல் போன்ற ஏனை அறிவியல் முறைகளால் பெறப்படும் வரலாற்றுண்மைகளுக்கு அரண் செய்வதாக அமைகின்றன.

இனி, ஆங்கிலத்தில் வழங்கும் தமிழ்ச் சொற்களில் ஒன்றினை ஆய்வோம். சேரன்தீவு (இலங்கை) என்னுஞ் சொல்லிலிருந்து Serendipity என்னுஞ் சொல்லை ஓரசு வால்போல் என்னும் மேனாட்டவர் ஆங்கிலத்துக்குத் தமிழிலிருந்து படைத்தளித்துள்ளார். இச் சொல்லுக்கு எதிர்பாராமல் புதியன கண்டுபிடித்தல் என்று ஆங்கில அகர முதலிகள் பொருள் கூறுகின்றன.

Serendipity—n. the faculty of making happy chance finds. Serendip—a former name of Ceylon. Horace Walpole coined the word (1754) from the title of the fairy-tale, 'The three Princes of Serendip', whose heroes were always making discoveries by accidents and sagacity, of things they were not in quest of.

இச் சொல்லின் வாயிலாக, சேரன்தீவம் எனப்பட்ட ஈழத்தில் வரையறுக்கப்படாத பழங்காலத்தில் சேர இளவரசர்கள் ஆங்கு வாழ்ந்திருந்து நாடாண்டனர் என்பதும், அவர்கள் நெடுந் தொலைவு கடற்பயணங்கள் மேற்கொள்ளுங்கால் புதிது புதிதாகப் பல தீவுகள் அல்லது நாடுகளையோ, பல புதிய பொருள்களையோ திடுமெனக் கண்டுபிடித்தனர் என்பதும் தெளிவாகிறது.

உலகை வலம் வரத் தலைமகன் (Captain)குக்கும், தென் முனை காண அமண்டுசன், இசுகாட்டு போன்ற ஆய்வாளரும் செய்த அருஞ்செயல்களை வரலாற்று நூல்கள் பரக்கப் பேசுகின்றன. பழந்தமிழர்கள் கடல் வழிச் சென்று செய்த அருஞ்செயல்களையும்,

கண்டுபிடிப்புகளையும் எடுத்துக்கூறச் சான்றுகள் மறைந்தன. சேர இளவரசர்களின் வெற்றிப் பயணக் கதைகள் பலவாக மக்களிடை வழங்கியிருக்க வேண்டும். அவற்றுள் ஒன்று 'மூன்று சேர இளவரசர்களின் கதை'யாக வழங்கி, ஓரசுவால்போலின் பார்வையில் பட்டிருக்க வேண்டும். எதிர்பாராமல் புதிது காணும் வரலாற்றுக்குரிய சேர இளவரசர்களின் நினைவாக ஆங்கில மொழிக்கு Serendipity என்னுஞ் சொல்லைப் படைத்தளித்து வால்போல் பழந்தமிழர்களின் கடலோடும் திறனுக்கும் கண்டு பிடிக்கும் ஆற்றலுக்கும் ஒரு வலுவான வரலாற்றுச் சான்றைத் தக்க வைத்துள்ளார். அவருக்குத் தமிழுலகம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. இந்தச் சொல் எப்படித் தோன்றியது என்னும் பின்னணி தெரியாவிட்டால் வரலாற்றுண்மை மாய்ந்து விட்டிருக்கும். ஆதலால் மொழியகழ்வாராய்ச்சியைப் பழங்கால வரலாற்றின் காப்பரண் என்கிறோம்.

தென் ஐரோப்பாவில் ஓடும் ஆறுகளின் பெயர்கள் பலவற்றில் அப் பகுதி மொழியின் வேர்ச் சொற்கள் காணப்படாமல் சித்திய மொழிச் சொற்கள் காணப்படுவதால், சித்திய மொழி பேசுவோர் தென் ஐரோப்பாவில் ஒரு காலத்தில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று மொழியகழ்வாராய்ச்சியாளர் முடிவு கட்டுகின்றனர்.

எழுத்துச் சான்றில்லாத வரலாற்றுப் பழங்காலத்தை மொழிக் கூறுகளின் துணையின்றி அறிய முடியாது. தொல்பொருள் ஆய்வாளரின் பணியையும் பழங்கால எழுத்துச் சான்றுகளின் பணியையும் மொழிக் கூறுகளே முன்னின்று ஏற்று ஆய்வாளரைப் புதிது காணவும் உண்மை காணவும் வழி நடத்திச் செல்லும் திறம் பெற்றுள்ளன என்று கோந்தரதோவ் கூறுகிறார்.

மெசபதோமிய பழங்கால எழுத்துச் சான்றுகளிலிருந்து 20 உபாய்து சொற்களை ஆய்ந்ததில் அவை திராவிடச் சொற்களாக உள்ளன.

திராவிடர் என்னும் சொல்லின் தோற்ற வரலாறு குறித்துப் பலரும் பலவகையான விளக்கங்கள் தந்து குழப்புவது போன்ற சிக்கல்கள் மொழியகழ்வாய்வினால் தவிர்க்கப்படும். தமிழ்மொழியைத் திராவிடம் என்று குறித்தவர் யார் யார்? அரவம் என்றவர் யார் யார்? எனப் பட்டியலிட்டுப் பார்த்தால் அச் சொல் பிறர் படைத்திட்டுக் கொண்ட சொற்கள் என்பது வெளிப்படும். தமிழர், தம்மைத் தமிழர் என்றே அழைத்துக் கொண்டனர்.

**சொல் வழக்குகள் :**

உலகில் முதன் முதல் எழுதப்பட்ட மொழி சுமேரியம் என்றும், அது கி. மு. 3,100 இல் எழுத்து வழக்குப் பெற்றிருந்தது என்றும் பிரித்தானியா கலைக்களஞ்சியத்தில் கூறப்பட்டுள்ளது. தமிழரின் தோற்றமும் பரவலும் (Origin and spread of Tamils) என்னும் நூலில் திரு. இராமச்சந்திர தீட்சிதர், சுமேரியர் தமிழரின் குடியேற்ற வழியினர் என்பதைத் தெளிவு படுத்தியுள்ளார். பாபிலோனிய மொழியிலுள்ள ஆப் (அப்பன், தந்தை) ஊர், சிறுபாக்கம் எனும் சொற்கள் முற்றிலும் தமிழ்ச் சொற்களாக இருப்பது மொழி நூலார்க்கு வியப்பூட்டி உண்மையையும் விளக்கிக் காட்டுகிறது.

கிரேக்கம், இலத்தீன் முதலிய தொன்மையான மொழிகளில் பல அடிப்படைச் சொற்கள் தமிழ்ச் சொற்களாக வுள்ளன.

கிரேக்க மொழியிலுள்ள Palaeo எனுஞ் சொல் பழைமையான என்னும் தமிழ்ச் சொல்லே. Palaeography, Palaeo anthropology எனுஞ் சொல்லாட்சிகளைக் காண்க.

வீடு, மனை, இல் எனும் சொற்களைப் போன்றே உறை என்பதும் குமரிக் கண்ட காலத்தில் வீட்டைக் குறித்தது. உறையூர் இதனடியாகத் தோன்றிய சொல். இச் சொல் இன்றும் வடதிராவிட மொழிகளில் ஒன்றான பிராகுவி மொழியில் 'உற' எனத் திரிந்து வீடு என்று பொருள்படுகிறது. இதே சொல் திராவிடக் குடும்பத்தின் தொலையுறவு மொழியான பாசுக்கு (Basque) மொழியில் மனைவியைக் குறிக்கிறது. பாசுக்கு மொழி இசுபெயின், போர்ச்சுகல் இடை எல்லைப் பகுதியில் பேசப் படுகிறது.

ஏதேனும் சிலபொருட் பெயர்கள் ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்குச் சென்றிருந்தால் அவ்விரு மொழியினரும் வணிகத் தொடர்பு கொண்டவர்,எனலாம். தமிழில் போர்த்துகீசியச் சொல் 'ஜன்னல்' புகுந்திருப்பதும் தமிழ்ச் சொற்களான முத்து, தோகை, இஞ்சி, நாவாய் போன்றவை மேலையாரியத்தில் புகுந் திருப்பதும் வணிகத் தொடர்பால் ஏற்பட்டவையே.

இவ்வாறில்லாமல் அடிப்படை (Basic vocabulary) பெயர்ச் சொற்கள், வினைச்சொற்கள் ஆகியவை சொல் வடிவிலோ, வேர்ச் சொல் அளவிலோ பிறமொழியில் காணப்பட்டால் இந்த இரு

மொழிகளும் ஒரே குடும்பத்தைச் சார்ந்தவை அல்லது இந்த இரு மொழிகளைப் பேசிய மக்களும் ஓர் இடத்தில் வாழ்ந்த ஒரே இனத்தினர் என்று முடிவு கட்டலாம்.

புதையுண்ட நாகரிகச் சின்னங்கள் பல ஆயிரம் ஆண்டு களுக்கு முற்பட்டதாயிருக்கும்போது சின்னங்களை மட்டும் வைத்துக் கொண்டு இந்த இனத்தார்தாம் இந்த நாகரிகத்தை வளர்த்தவர் என்று உறுதியாகக் கூறிவிட முடியாது. ஏனெனில் குறிப்பிட்ட ஓரினத்தார் கிறித்தவராக இருந்து அடுத்த நூற்றாண்டில் முகமதிய ராக மதம் மாறிவிடக் கூடும். அரசியல் வேறுபாடுகள், சமய வேறுபாடுகள், மக்களின் வாழ்க்கையமைப்பு, நாகரிகப் போக்கு ஆகியவற்றை மாற்றிவிடக் கூடும்.

இன்று கிழக்கு வங்காளத்தில் வாழும் முகம்மதியரில் பெரும் பாலோர் இந்துக்களாக இருந்து மதம் மாறியவர்கள். அவர்களின் வாழ்க்கை முறை இந்து சமயத்தைத் தழுவியதாக இருக்க வாய்ப் பில்லை. அவர்கள் மதம் மாறினாலும் தாய்மொழியை மாற்றிக் கொள்ளாமல் வங்காள மொழியையே பேசுகின்றனர். அவர்களின் மொழியை வைத்துக்கொண்டுதான் அவர்களை இனம் கண்டறியக் கூடும். ஆதலால் வரலாற்றுக்கு முந்திய மக்களின் இனப் பிரிவு களையும் காட்டும் திறம் மொழிக்கு இருப்பதால் மொழியகழ் வாராய்ச்சி வரலாற்றுக்குத் துணைபுரியும் கருவியாகக் கொள்ளப் பட்டு வருகிறது.

ஆப்பிரிக்கா கானநாட்டு மொழியில் வா, போ, தூக்கு முதலிய தமிழ்ச் சொற்கள் உள்ளவாறே வழங்குகின்றன. அவர்கள் மகளிர்க்குத் தேவி எனவும் பெயரிட்டழைக்கின்றனர். தெய்வம், தேவு என்பன அழகிய தமிழ்ச் சொற்கள், தெய்ய எனும் சொல் உரையசையாகக் கேண்மைப் பொருளில் கடைக் கழக இலக்கியங்களில் ஆட்சி பெற்றுள்ளது.

வடதுருவத்தில் காணப்படும் அரோரா பொரியாலீஸ் எனும் ஒளியை முதன்முதல் கடல் பயணிகள்தாம் கண்டிருக்க முடியும். நிலத்திலிருந்து எந் நாட்டவரும் அதனைக் காண முடியாது. உலகில் முதன்முதல் கடலில் நாவாய் செலுத்திக் கடல் வாணிகம் செய்தவர் தமிழர் என்பது உலகம் ஒப்புக்கொண்ட உண்மை. அதன் விளைவாகக் கப்பலைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லான நாவாய், ஆங்கிலத்தில் Navy என வழங்குகிறது. தமிழ் வணிகர் வடதுருவ ஒளிக்கு வடவனல் எனப் பெயரிட்டனர். இதுவே

அரோரா பொரியாலீஸ் என வழங்கப்படுகிறது. பொரியாலீஸ்— வடக்கு. அரோரா—ஒளி.

நாவாய், வடவனல் ஆகிய இரு சொற்களும் தமிழ் முன்னோரின் மொழியிலிருந்து உலக மொழிகளில் இடம் பெற்றிருப்பதால் இந்த இரண்டு சொற்களைப் பற்றிய ஆராய்ச்சி தமிழனின் தொன்மையான நாகரிகத்தைக் காட்டும் புதைபொருள் குறியீடுகளாகத் திகழ்கின்றன.

ஒரு நாட்டின் பண்டை வரலாற்றையறியப் பொத்தகமும் செய்யுளுந்தான் வேண்டுமென்பதில்லை. அந் நாட்டு மொழி அல்லது சொற்கள்கூட வரலாறுரைப்பனவாகும். இதே கருத்தை கிரகாம் என்னும் மேலை நாட்டு ஆசிரியரும் கூறுகிறார் :

The teacher ought to note for remark the living memorials, in the words of today of the social and political condition of the people in the ages gone by. The inner life of every people is stereotyped in these languages and retained therefore the instruction of, future generations and the teacher will signally fail if he does not evoke from customs and Morals.

(English word book-by JOAN GRAHAM.)

(தொடரும்)

---

## புதையல்

"தமிழுக்குக் 'கதி' யாவார், கம்பரும் திருவள்ளுவரும்" என்னும் தொடரை வழங்கியவர் திருமணம் செல்வக் கேசவ ராய முதலியார்.

சைவத்திற்கு 'மதி' யாவார், மங்கையர்க் கரசியாரும் திலகவதியாரும் என்றவர் சாத்தூர் தூ. சு. கந்தசாமி முதலியார்.

—கலைமணி

# சங்க இலக்கியத்தில் தடவும் பிடவும்

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

தடா என்ற பெயர் பெரிதையும் குறிக்கும் என்று தொல்காப்பியம் கூறியுள்ளது. 'தடவும் கயவும் நளியும் பெருமை' (சொல். 320) என்று தொல்காப்பியம் கூறியுள்ளது. ஆதலின் தடா என்ற பெயர் இம்மரம் பெரிதாக நீண்டு வளர்வதனால் வந்திருக்கலாம். தடா மரத்தின் பூ நீண்டு ஊமத்தம் பூப்போல் உருவுகொண்டது. வெண்மையாகக் காணப்படும். நல்ல நறுமணமுடையது. சங்க நூல்களில் ஒரே ஒரு குறுந்தொகைப் பாடலில் கூறப்பட்ட தடா மரத்தைத் தெரிந்துகொள்ளத் தெலுங்கு மொழி வழக்குப்பெயர் உதவியதைக் காணும்போது சங்க நூற்பெயர்களின் வழக்குகளைப் புரிந்துகொள்ளப் பிற திராவிட மொழிகளும் துணைபுரியும் என்பது தெளிவாகின்றது. சென்னைப் பல்கலைக்கழக அகராதி தடா என்பது ஒரு மரம் என்று கூறியுள்ளதே தவிர எந்த மரம் என்று குறிப்பிடவில்லை. திராவிட வேர்ச்சொல் லகராதியில் (Dravidian Etymological dictionary) தடா என்ற மரத்தை முற்றிலும் குறிப்பிடாதது வியப்பாக உள்ளது. இந்த அகராதியின் அடுத்த பதிப்பில் தடா என்ற மரப்பெயர் சேர்க்கப்படவேண்டும். சங்க நூல்களிலும் பிற நூல்களிலும் ஒரே ஒரு பாடலில் மட்டும் வரும் பிற செடி கொடி மரப்பெயர்களையும் ஆராய வேண்டும். வளகு, தெறுழ், சிலை, மணிச்சை, உச்சிச்செலுந்தில், அதர்வை ஆகியவை பின்னர் ஆராயப்பட்டு விளக்கப்படும்.

பிடா என்ற பெயர் சங்க நூல்களில் பல பாடல்களில் வருகின்றது. பிடா ஒரு குற்று மரமாகும். இலையுதிர் மரமாகும். பிடாவின் பூ பெரிதாகவும் வெண்மையாகவும் நறுமணமுடையதாகவும் இருக்கும். கொத்தாகப் பூக்கும். பிடாவின் பூ வீசும் நறுமணத்தைச் சங்க நூல்களும் கூறியுள்ளன.

*"சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்*
*கண்ணியின் மலரும் தண்ணறும் புறவில்"* —அகம்-34

*"ஓங்குமலைச் சிலம்பின் பிடவுடன் மலர்ந்த*
*வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன"* —அகம்-147

*"குறும்புதல் பிடவின் நெடுங்கால் அலரி*
*செங்கில மருங்கின் நுண்அயிர் வரிப்ப"* —அகம்-154

*"காலை வந்தன்றால் காரே மாலைக்*
*குளிர்கொள் பிடவின் கூர்முகை அலரி*
*வண்டுவாய் திறக்கும் தண்டா நாற்றம்*
*கூதிர் அற்சிரத்து ஊதை தூற்றப்*
*பனியலைக் கலங்கிய நெஞ்சமொடு"* —அகம்-183

"சுரும்பிமிர் மலர கானம் பிற்பட
வெண்பிடவு அவிழ்ந்த வீகமழ் புறவில்" —அகம்-184

"சுரும்பிமிர் பூதப் பிடவுத்தளை யவிழ
அரும்பொறி மஞ்ஞை யால வரிமணல்" —அகம்-304

"வளமழை பொழிந்த வானிறக் களரி
உளர்தரு தண்வளி உறுதொறும் நிலவெனத்
தொகுமுகை விரிந்த முடக்காற் பிடவின்
வையேர் வாலெயிற் றொண்ணுதல் மகளிர்" —அகம்-344

"புதன்மிசைத் தளவின் இதண்முட் செந்நனை
நெருங்குகுலைப் பிடவமொடு ஒருங்குபிணி அவிழும்
காடே கம்மென் றன்றே யவல" —அகம்-23

"வருவர் வாழி தோழி புறவில்
பொன்வீக் கொன்றையொடு பிடவுத்தளை அவிழ
இன்னிசை வானம் இரங்குமவர்
வருதும் என்ற பருவமோ இதுவே" —நற்றிணை 246

"தளவுடன் கமழப் பிடவுத்தளை அவிழக்
கார்செயல் செய்த காமர் காலை" —நற்றிணை 256

"கால மாரி பெய்தென வதனெதிர்
ஆலலு மாலின பிடவும் பூத்தன" —குறுந்தொகை. 251

"நன்றே காதலர் சென்ற வாறே
நிலனணி நெய்தல் மலரப்
பொலனணி கொன்றையும் பிடவமு முடைத்தே"
—ஐங்குறுநூறு-புறவணிப்பத்து-435

"கான்யாறு தழீஇய வகனெடும் புறவிற்
சேணுறு பிடவமொடு பைம்புத லெருக்கி"
—முல்லைப்பாட்டு 24-25

"பிடவ மலரத் தளவ நனையக்
கார்கவின் கொண்ட கானங் காணின்" —ஐங்குறு நூறு 499

"காரென்று அயர்ந்த உள்ளமொடு தேர்வில
பிடவுங் கொன்றையுங் கோடலும்
மடவ வாகலின் மலர்ந்தன பலவே" —நற்றிணை 99

"வறங்கொல வீந்த கானத்துக் குறும்பூங்
கோதை மகளிர் குழூநிரை கடுப்ப
வண்டுவாய் திறப்ப விண்ட பிடவ
மாலை அந்தி மாலதர் நண்ணிய
பருவஞ் செய்த கருவி மாமழை" —நற்றிணை 238

"பூத்த முல்லை புதல்சூழ் பறவை
கடத்திடைப் பிடவின் றொடைக்குலைச் சேக்கும்
வான்பளிங்கு விரைஇய செம்பரன் முரம்பின்"
—பதிற்றுப்பத்து 66 : 16-18

"குடசமும் வெதிரமுங் கொழுங்கொடிப் பகன்றையும்
பிடவமும் மயிலையும் பிணங்கரின் மணந்த"
—சிலம்பு 13 : 157-158

"பிடவமும் தளவமும் முடமுட் டாழையும்
குடசமும் வெதிரமும் கொழுங்கா லசோகமும்"
—மணிமேகலை 3163-164

கம்பராமாயணத்தில் 'நுரையெனப் பொருவுவ பிடவும்' (கார்காலம்-47) என்று வெண்மையான பிடவத்தின் பூங்கொத்து அழைக்கப் பட்டுள்ளது. வெண்மையான கடல் நீர் நுரைபோன்று பிடவின் பூங்கொத்து இருந்ததாகக் கம்பன் கூறியுள்ளான். "சிறு கரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்" என்று முரண்தொடையாகக் கூறியது சிறப்பாகவும் பொருத்தமாகவும் உள்ளது. ஏனென்றால் பிடவின் பூங்கொம்பு சிறிது கருமையாகக் காணப்படும். வெண்மை யான பெரிய மலரையுடைய குறுமரத்தை "வெண்டலைக் குறும் புதல்" என்று கூறியதும் பொருத்தமே. 'நெருங்கு குலைப்பிடவம்' (அகம் 23) என்று கூறப்பட்டதைக் காணவேண்டும். பிடவத்தின் பூ மாலையாக, கோதையாக அஃதாவது கொத்தாக உள்ளதால் 'நெருங்கு குலைப்பிடவம்' என்று கூறப்பட்டுள்ளது. பிடவம் 'நெருங்கு குலைபோலப் பூப்பதைச்' செடிநூலார் Inflorescence என்று கூறுவர். பிடவு புதலாகப் பூத்திருப்பதைக் கூறியுள்ளதையுங் காணலாம். பிடவு குறுமரமாகும். பிடவின் குறுமரங்கள் புதலாகப் பூத்தது இயற்கைச் செய்தியேயாகும். பிடவின் சிறப்பான தன்மை பூவின் தூய வெண்மையும் கமழும் நறுமணமுமாகும். பிடவின் 'தண்டா நாற்றத்தைப்' பற்றி அகநானூறு (183) கூறியுள்ளது. 'வெண்பிடவு அவிழ்ந்த வீகமழ் புறவில்' (அகம் 184) 'காடே கம் மென்றன்றே' (அகம் 23) 'சேணுறு பிடவமொடு' (முல்லைப் பாட்டு-வரி-25) என்று வரும் சங்க நூற்பாடல் வரிகளில் பிடாவின் அரிய சிறப்பான நறுமணமுடைய பூவின் தன்மை கூறப்பட்டுள்ளது. செடிநூலாரும் (Botanists) பிடாவின் நறுமணப்பூக்களையே சிறப் பாகக் கூறியுள்ளனர். பிடாவின் பூவின் நறுமணம் தொலைவிலும் வீசும் என்று கூறியது பொருத்தமானதே. பிடவுப்புதல்களாக இருக்குமிடத்தில் 'காடே கம்மென்றன்றே' என்று கூறிய செய்தியும் இயற்கைக்கு ஒத்ததே. பிடாமரங்கள் சூழ்ந்துள்ள காட்டில் 'கமகமவென' நறுமணம் வீசுவது இயற்கையே. இக் காலத்தில்

'கமகமவென' என்று கூறும் பேச்சுவழக்கு 'கம்' என்ற சங்ககாலச் சொல்லிலிருந்து தோன்றிய வழக்காகும். பிடாமரம் கார்காலத்தில் பூத்ததாகக் கூறியதும் இயற்கைச் செய்தியே யாகும். தடாவையும் பிடாவையும் தொல்காப்பிய இலக்கணமே கூறியுள்ளது. சங்க நூல்களில் பிடாவை நன்கு தெரிந்த அளவு தடாவைத் தெரிந்தாரில்லை.

''பாமரக் கிளவியும் பிடாவும் தளாவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே''
—எழுத்ததிகாரம் 229

என்று தொல்காப்பியம் கூறியுள்ளது. பிடாங்கோடு என்று வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும் என்று கூறப் பட்டுள்ளது. ஆதலின் பிடா என்ற மரம் தொல்காப்பியர் காலத் திலேயே நன்கு அறியப்பட்ட மரமாகும்.

பிடாவைக் 'குட்டிப்பிடவம்' என்று அழைப்பதாகச் சென்னைப் பல்கலைக்கழக அகராதி கூறியுள்ளது. மற்றும் மணிமேகலையில் மலர்வனம் புக்க காதையில் கூறப்பட்டுள்ள குறிப்புரையில் 'குட்டிப் பிடவமெனுங்கொடி' என்று கூறப்பட்டுள்ளது. பிடவம் கொடி வகையன்று; குறுமரமாகும். பிடாவைப்'புடன்' என்றும் நாட்டார் மக்கள் இன்றும் அழைக்கின்றனர். பிடாவை ஆங்கிலத்தில் Bedaly emetic nut என்றும் அறிவியலில் Randia Dumetorum என்றும் அழைப்பர். பிடாமரத்தின் காய் மீன்களுக்கு நஞ்சாகும். இதன் காயை அரைத்துக் கிணற்றில் கரைத்தால் மீன்கள் இறந்து மிதக்கும். அந்த மீன்களை நாட்டார் மக்கள் உண்பர். இதன் பழத்தை நாட்டார் மக்கள் உண்பதைப் பார்த் திருக்கின்றேன். மக்களுக்குப் பிடாவின் காயோ பழமோ நஞ்சன்று. பிடாமரம் முல்லையிலும் பாலையிலும் காணப்படுவதாகும். ஆதலின் பிடாமரம் சங்கநூல்களில் முல்லை நிலத்தில் பெரும்பாலும் பாலை யில் அரிதாகவும் கூறப்பட்டுள்ளது. இலையுதிர்காடுகளிலும் குறுங்காடுகளிலும் எளிதாக, இயற்கையாகப் பிடா மரம் காணப் பட்டதாலும், பிடாவின் சேண் நாறும் மணத்தினாலும் பிடா மரச் சூழல் காடு கம்மென்ற நறுமணம் வீசியதாலும் சங்கநூல்கள் பிடாவைப்பற்றிப் பல பாடல்களில் கூறியுள்ளன. ஆனால், இக் காலத்தில் பிடா மரத்தைப் பார்த்தோர், அறிந்தோர் மிகச் சிலரே. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு இருந்த இயற்கைச் செய்திப் புலமை (Nature Study) அறிவியற்புலமை இன்றைய படித்த தமிழர்களுக்கும் இல்லாமையைக் காண்கிறோம்.

———

# கசப்பும் இனிப்பும்

[புலவர் இரா. இளங்குமரன்]

இந்திய ஒருமைப்பாடு கட்டாயம் வேண்டும்! காசுமீரம் முதல் கன்னியாகுமரிவரை ஒரே நாடே! ஆனால், நடைமுறைகள் எப்படி இருக்கின்றன?

தில்லி நாடாளுமன்றக் கருத்தரங்கு மண்டபத்திலே ஒரு மாநாடு. அது நாடாளுமன்றச் செயலகச் சார்பில் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்கள் உரிமை பற்றிய அனைத்திந்திய ஆய்வு மாநாடு. இரண்டுநாள் கருத்தரங்கு. அதில் கிளர்ந்தது ஒரு குரல்: "நான் தமிழில் உரையாற்றப்போகிறேன்; இதனை மற்ற உறுப்பினர்களின் வாய்ப்புக் கருதி மொழிபெயர்க்கவேண்டும்." இக் குரலை எழுப்பியவர் தமிழக மேலவைக் 'கொறடா' டாக்டர் சனார்த்தனம்.

தலைமை தாங்கிய திரு. அத்வானி மறுமொழி கூறினார்: "இந்தி ஆங்கிலம் ஆகிய இருமொழிகளுக்கு மட்டுமே மொழி பெயர்ப்பாளர்களும், மொழிபெயர்ப்புக் கருவிகளும் உள்ளன. ஆதலால் உறுப்பினர் ஆங்கிலத்திலேயே பேசக் கேட்டுக் கொள்கிறேன்."

இந்திய மக்களுக்கெல்லாம் ஒத்த உரிமை! இந்தியமொழிகளுக்கெல்லாம் ஒத்த உரிமை! இவற்றை நம்பவேண்டும்! நம்பவில்லையா? அவர்கள் ஒருமைப்பாட்டை, ஒவ்வாதவர்.

* * *

மைய அரசுச் சட்டங்கள் ஐந்தின் தமிழாக்கம் முதன் முறையாக இந்திய அரசாணை இதழில் (கெசட்டில்) வெளியிடப் பெற்றுள்ளது. இஃது ஓர் இனிப்பான செய்தி.

நூறாண்டுகளுக்கு மேலாக ஆங்கிலத்தில் மட்டுமே வெளியிடப்பெற்று வந்தது, முதன் முறையாகத் தமிழாக்கம் பெறுகிறது என்றால் இனிப்பான செய்திதானே! அதிலும் வட்டார மொழிகளில் தமிழ்மொழி பெயர்ப்பு ஒன்றுதான், இந்தியநாட்டுத் தலைவரால் முதன் முதலாக ஏற்கப்படுகின்றதாம்!

தமிழக ஆட்சி மொழிக்குழு இதுகாறும் மைய அரசின் 87 சட்டங்களை மொழிபெயர்த்து, மைய அரசின் இசைவுக்கு அனுப்பியுள்ளதாம். மாநில அரசின் 41 சட்டங்களை மொழி பெயர்த்துள்ளதாம்.

அண்மைக் காலத்தில் நடுவர்களின் தமிழ்த் தீர்ப்புகள் ஆங்கிலத் தீர்ப்புகளுக்கும் தரத்தில் சிறந்துள்ளனவாம். இந்த இனிக்கும் செய்திகளை நீதிபதி மகாராசனார் வெளியிட்டுள்ளார்.

நாடு விடுதலைபெற்று முப்பத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்னராவது இனிக்கும் இச் செய்தி கேட்கப்படுகின்றதே!

———

# பெரியாரும் பைந்தமிழும்

[வேலூர். ம. நாராயணன் எம். ஏ.,]

தந்தை பெரியார் அவர்கள் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற ஞாலத் தலைவர்களுள் முதன்மையானவர். சிறந்த சிந்தனையாளர். ஒரு நூற்றாண்டு காலம் வாழ்ந்து பட்டி தொட்டிகளிலெல்லாம் சுற்றி வீழ்ச்சியுற்ற தமிழகம் எழுச்சி பெறப் பல்லாற்றானும் தளராது உழைத்தவர். தமது பேச்சால், எழுத்தால், சீரிய நல் தொண்டால் நாலரைக் கோடி தமிழர்களையும் வீறு கொள்ளச் செய்தவர்.

தந்தை பெரியாரின் சிந்தனை உலைக்கூடத்தில் தணலில் இட்டு உருக்கப் பெறாத—அடித்துத் திருத்தப் பெறாத—செப்பனிடப் பெறாத துறை தமிழகத்தில் எதுவுமில்லை; தந்தை பெரியார் 'தமிழகம் நன்னிலை எய்த வேண்டுமாயின் சமுதாயத்தின் பல்வேறு கூறுகளாகிய மதம், மொழி, கலை, நாகரிகம், சமயம், சாதி போன்ற அனைத்திலும் ஒரே சீரான—ஒட்டு மொத்தமான புரட்சி, ஒரே நேரத்தில் நிகழ்ந்தாக வேண்டும்' என்ற கொள்கையினைக் கொண்டிருந்தவர்.

மொழியினைப் பற்றிப் பொதுவாகக் கருத்துக்களைக் கூறிய பெரியார். தமிழ் மொழியைத் தாம் விரும்புவதற்கான காரணங்களைக் கூறுவது உண்மையாகவும், உயர்வாகவும் உள்ளது:

**பெரியாரின் மொழிச் சிந்தனை:**

"தமிழ் இந் நாட்டுத் தட்பவெப்ப நிலைக்கேற்ப அமைந்துள்ளது. மூட நம்பிக்கையை உண்டாக்கும் கருத்துக்களுக்குத் தமிழ்மொழியில் இடம் இல்லை; இந்திய நாட்டுப் பிற எம்மொழியையும்விடத் தமிழ் 'நாகரிகம்' பெற்று விளங்குகிறது. நமது மேன்மைக்கு, நமது தகுதிக்கு, நமது முற்போக்குக்கு ஏற்ற மொழி தமிழைவிட, மேலான ஒரு மொழி இந்த நாட்டிலில்லை என்பதற்காகவே தமிழை விரும்புகிறேனே தவிர, அது அற்புத வியப்புக்களை விளைவிக்கக் கூடியது என்பதற்காக அன்று!"

இதினின்றும், இனிமை நிறைந்த தமிழ்மொழியானது பகுத்தறிவாளர்களுக்கும் சால்புடைய ஒரு மொழியாகத் திகழும் ஆற்றல் வாய்ந்தது என்பது பெறப்படுகிறது.

**திராவிடமனைத்தும் தீந்தமிழ் மொழியே:**

தற்போதைய திராவிட மொழிகள் அனைத்திற்கும் தமிழ் மொழியே மூலம் என்பது அறிஞர் பலருடைய கருத்தாகும். ஆனால், தந்தை பெரியார் அவை அனைத்துமே தமிழ்தான் என்று உறுதியுடன் எடுத்துரைப்பது நம்முடைய மொழிவழிச் சிந்தனைத் தருவிற்குச் சிறந்ததோர் எருவாக அமைகிறது:

"என் சிற்றறிவிற்கு, என் பட்டறிவிற்கு, ஆராய்ச்சிக்குத் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கும் தனித் தனி மொழிகளென்றோ அல்லது தமிழ் தவிர மற்ற மூன்றும் தமிழிலிருந்து பிரிந்த மொழிகளென்றோ தோன்றவில்லை; ஒரே மொழி—அதாவது தமிழ்தான் நாலு இடங்களில் நாலுவகையாகப் பேசப் பட்டு வருகிறது என்றே நான் கருதுகிறேன்.

"தமிழில் வீடு என்பதைத் தெலுங்கில் இல் என்றும், கன்னடத்தில் மனை என்றும், மலையாளத்தில் பொறை என்றும் கூறுவார்கள். இந்த நான்கையும் தமிழ் அகராதியில் வீட்டிற்குரிய பல பெயர்களாகக் காணலாம். தமிழில் நீர் என்பதைக் கன்னடத்தில் நீரு என்றும், தெலுங்கில் நீள்ளு என்றும், மலையாளத்தில் வெள்ளம் என்றும் கூறுவார்கள்; மலையாளத்தில் மழை அதிகம். எனவே அவர்கள் எப்பொழுதும் நீரைப் பெருத்த அளவில்தான் (வெள்ளம்) பார்ப்பார்கள். இந்த மாதிரி, தமிழ்ச் சொற்கள் அந்தந்த இடத்திலுள்ள தட்பவெப்ப நிலைக்கேற்ப, பேச்சுப் பழக்கத்துக்கு ஏற்ப உச்சரிப்பில் சிறிது மாற்றமடைந்திருக்கிறதே தவிர வேறில்லை.

"தர்மபுரியானும், கொங்குநாட்டுக் கிராமத்தானும், யாழ்ப் பாணத்தானும் இவர்கள் யாவரும் பேசுவது தமிழ்தான். ஆனால், தர்மபுரித் தமிழன், யாழ்ப்பாணத்தான் கூறுவதை இரண்டுமுறை திருப்பிக் கூறினால்தான் தெரிந்துகொள்வான். அதேபோலக் கொங்கு நாட்டுக் கிராமத் தமிழன் தான் கூறுவதை மூன்றுமுறை திருப்பிச் சொன்னால்தான் தர்மபுரியான் அறிந்துகொள்ள முடிகிறது. எடுத்துக்காட்டாக, யாழ்ப்பாணத்தான் "அவர்கள் அப்பொழுதே வந்துவிட்டார்கள்' என்று கூறுவதைத் திருநெல் வேலியான் 'அவா அப்பமே வந்தா' என்பான். கிராமத்தான் 'அவியொ அப்பவேயே வந்தாங்கோ' என்பான். இப்படி ஒரே மொழி வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு வகையாகப் பேசப்படக் காரணம் என்ன? அவர்கள் ஒருவருக் கொருவர் எளிதில் கலந்துகொள்ள வசதியான போக்குவரத்துச் சாதனங்கள் இல்லா

மையும், அவர்களைப் பிரித்து வைக்கும் மலைகள், ஆறுகள், கடல்கள் உள்ளமையும் ஆகிய இவைதாம் காரணம்."

இத்தகைய ஆழமான சிந்தனைகள் பொதுவாகச் சிறந்த மொழிநூல் அறிஞர்கட்குமட்டுமே தோன்றும். ஆனால், தந்தை பெரியார் போன்ற சமுதாயச் சீர்திருத்தவாதிகட்குத் தோன்றுவது பெரிதும் வியப்பாகவே உள்ளது.

தமிழ்மொழி பாதுகாக்கப்பட வேண்டியதின் இன்றியமை யாமைபற்றிக் கூறவரும் தந்தை பெரியார், "தமிழ் இந்த நாட்டுமக் களுக்கு அனைத்துத் துறைக்கும் முன்னேற்றம் அளிக்கக் கூடியதும் உரிமையை அளிக்கக் கூடியதும் ஆகும் என்பது எனது கருத்து. ஆனால், அப்படிப்பட்டவை யெல்லாம் தமிழிலே இருக் கின்றனவா என்று சிலர் கேட்கலாம். எல்லாம் இல்லை என்றாலும், மற்றும் பிற இந்திய மொழிகளைவிட அதிகமான முன்னேற் றத்தை அளிக்கக்கூடிய கலைகள், பழக்க வழக்கங்கள், அதற்கேற்ற சொற்கள் தமிழில் இருக்கின்றன என்று அறிகிறேன். ஆதலால், தமிழுக்குக் கேடு உண்டாக்கும் என ஐயப்படத்தக்க எந்த மொழியும் விரும்பத் தகாததேயாகும்" என்றுரைப்பதை நாம் அனைவரும் பொன்னேபோல் போற்றிப் பாராட்டவேண்டும்.

இதுகாறும், பைந்தமிழ் மொழிபால் பெரியார் கொண்டிருந்த பற்றினைப்பற்றி விரிவாக ஆராய்ந்த நாம், பெரியார் அவர்கள் கூற்றுக்கிணங்க, "மக்களுடைய வாழ்க்கைக்குப் பயன்படக் கூடியதும், அறிவையும், திறமையையும் உறுதியையும் உண்டாக்கக் கூடியதும் ஆகிய சிறந்த கலைகளையெல்லாம் தமிழில் எழுதிப் பரவச் செய்வதன் மூலம், மக்களுடைய அறிவையும், தமிழ்மொழியையும் செம்மை செய்வதே தமிழ் உணர்ச்சியாகும்."

———

## கொடுக்கக் கொடுக்கக் குறையாத செல்வம்!

*கணவனை இழந்த ஒரு பெண் அறிவைத் தவிர வேறொன்றும் துணை இல்லாதவள் - மன்னனையே பார்த்து 'அறிவு அறைபோகிய மன்னு' என அழைக்கும் அந்நாள் உணர்ச்சியை - எழுச்சியை நாம் மீண்டும் பெறவேண்டும். நாம் உலகிற்குத் தரமுடிந்தது இந்த அறிவுச் செல்வத்தைத்தான்! அதுதான் கொடுக்கக் கொடுக்கக் குறையாத செல்வம்.*

—பேரறிஞர் அண்ணா

# தமிழிசையின் உச்ச உயர்கருவி

[புலவர் பொன். முனியப்பன், கூவனூர்.]

மாந்தன் பிறந்த நிலம் குமரிக்கண்டம் ஆதலாலும், குமரிக் கண்டத்திலேயே முத்தமிழும் மலர்ச்சியுற்றதுடன் அதற்குரிய இலக்கிய இலக்கணங்களும் தோன்றிவிட்டமையாலும் உலகின் முதல் இசை தமிழ் இசையே என்பதில் ஐயம்கொள்ள இடமில்லை.

ஒலி, ஓசை என்னும் தனித்தமிழ்ச் சொற்களின் பிறப்பியல் முறை, இதனை மிகத்தெளிவாய் உணர்த்தும். மொழி ஞாயிறு தேவநேயப்பாவாணர் நூல்களில் இவ்வுண்மைவரலாற்றை-சொல்வரலாற்றைக் கண்டு தெளிக.

மேலும், உலகில் தமிழ்மொழி ஒன்றே இயல், இசை, கூத்து என்னும் முப்பகுப்பைப் பெற்றிருப்பதும்; இறைவன்-சிவன் தன் கையில் வைத்துள்ள துடி என்னும் கருவியால் ஒலி எழுப்பி, அவ்வொலியால், ஒலிபரவ உதவும் காற்றால், உயிர்ப்பால், உயிர்ப்பென்னும் மூச்சால் உயிர்களைப் படைக்கின்றான் என்னும் மெய்ப்பொருட் கருத்தும் இவ்வுண்மைக்கோர் உயரிய சான்றாகும்.

அம்மட்டோ, தமிழர்தம் வாழ்வில் பிறப்புமுதல் இறப்பு வரை ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் இசை இரண்டறக் கலந்து விளங்குவதனாலும், இந்த ஒழுங்கும் சீர்மையும் உலகில் வேறு எங்கும் காணப்படாமையாலும் தமிழிசையே உலக இசைகளுக்கெல் லாம் தாயிசையாகும் என்பது உறுதியாகிறது. இதனைத் தாலாட்டு முதல் ஒப்புவரி (ஒப்பாரி) முடிய உள்ள பல்வேறு தமிழ்நூல்களில்-பாக்களில் காண்க.

இசையின் பிறப்புபற்றிய இயற்கையோடிணைந்த உண்மை வரலாற்றைத் தமிழ் இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. அகநானூற்றின் 82-ஆவது பாடல் இயற்கையினின்றும் இசை பிறந்த அழகை எடுத்தியம்புகிறது. இதற்கொத்த வேறு சில பாக்களும் கழக இலக்கியங்களில் உள்ளன.

இவ்வாறு இயற்கைவழி பிறந்த இசையை முறைப்படுத்தி, வகைப்படுத்தி, நெறிப்படுத்தி, கணக்கியல் அடிப்படையில் வகுத்துப் பண்படுத்தியதால் இசையைத் தமிழர் பண் என்றனர்.

குமரிநிலத் தமிழர்க்கு ஒப்பான, மிக நுட்பமான மெல்லொலிகளையும் வேறுபடுத்தி உணரும் நயஞ்சான்ற எஃகுச் செவியினர் இன்று அரியராகவே யுள்ளனர். நற் கேள்வியால் தோட்கப்பட்ட நுண்செவியினரால் வகுக்கப்பட்ட தமிழிசையே உலகில் பிற இசைகளாக உருமாறின.

குமரிநிலத்தினின்றும் கடல் கோளாலும், பிறவற்றாலும் உலகின் பல பக்கங்களுக்கும் கடலோடியும், தரைச்செலவும் கொண்ட மெய்வரலாற்றை உணரும்போது தமிழிசையே உலகின் முதலிசை என்பது வெண்மைகொள் பனிமலையென வன்மை யுற்றுத் திகழும்.

உலகின் பல்வேறிடங்களில் ஏற்பட்டுள்ள பழைய நாகரிகங்கள் எல்லாம் படிப்படியான வளர்ச்சியின்றி, திடீர் என உயர் நாகரிகத் தன்மைகளைக் கொண்டிருப்பதே, குமரிநிலத் தமிழர்கள் உலகெங்கும் பரவி உயர்நாகரிகங்களைத் தோற்றுவித்தனர் என்பதற்கு மிகச் சிறந்த சான்றாகும். இவ் வுண்மையை அவ்வந்நாட்டு வரலாறும் அதன் ஆய்வும் தெளிவாக்குகின்றன.

மெய்வரலாற்றில் நாட்டமுள்ளாராலும், நடுநிலை ஆய்வறிஞர்களாலும் இவ்வுண்மை இனிதே எடுத்துரைக்கப்பட்டுள்ளது. பர். ஆனந்த குமாரசாமி என்பார் தம் 'History of Indian and Indonesian' என்னும் நூலில் 'உலகில் முதலிசை தமிழிசையே' என்பதைத் தக்க ஆய்வுடன் எடுத்துக்காட்டியுள்ளார்.

இலங்கை ஆய்வறிஞர்களின் நூலிலும் இவ் வுண்மை நன்கு நிலைநாட்டப்பட்டுள்ளதைக் காணலாம். 'மாந்த வரலாற்றில் உயர்தனிச் செவ்விசையாகத் (Classical Music) தமிழ் ஒன்றே 1200 ஆண்டுகளுக்கு முன்பே விளங்கியதை வரலாறு உணர்த்துகிறது' என இசைக்கலைப் பேராசிரியர் திரு. சாம்பமூர்த்தி அவர்கள் இயம்பியுள்ளார்.

இன்று இசைபற்றிய இலக்கிய இலக்கணங்கள் பெரும்பாலும் அழிந்துவிட்டன. என்றாலும், கிடைத்துள்ள இலக்கியங்கள் கூறும் இசைக்கருவிகளின் (கருவிப் பெயர்களின்) அளவிற்கு உலகில் வேறு எம்மொழியினரிடத்தும் இல்லை என்பதும், தமிழிசையே உலகின் முதலிசை என்பதற்கோர் ஒப்பிலாச் சான்றாகும்.

மேலும், தமிழர்கண்ட உயரிய இசைக்கருவியான யாழிற்குக் 'கேள்வி' என்னும் ஒரு பெயரும் அமைந்துள்ளது.

"அமிழ்துபொதிந் திலிற்றும் அடங்குபுரி நரம்பின்
பாடுதுறை முற்றிய பயன்தெரி கேள்விக்
கூடுகொள் இன்னியம்" —சிறுபாண் : 227—229

"பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
தொடையமை கேள்வி" —பெரும்பா : 15-16

"ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி"
—சிலப்ப : 3 : 70

இவ்வாறு யாழிற்குக் கேள்வி என்னும் பெயர் அமைந்தது இசையின் மீமிசை நிலையைக் குறிப்பதாகும். ஏனென்றால், வள்ளுவர் கேள்வி என ஓர் அதிகாரம் வகுத்துள்ளார். அதன் பொருள் என்ன ?

"ஓர் ஆசிரியரிடத்து அமர்ந்து ஒருநூலை அல்லது கல்வித் துறையைக் கற்றவன் அத் துறையில் தேர்ச்சி பெற்ற பேரறிஞரை அடுத்து, தான் அறியாத நுட்பங்களையும், வேறு பல சிறப்புக்களையும் கேட்டறிதல் ஆகும்."

இதனை நோக்கி யாழிற்குக் கேள்வி என்னும் பெயர் அமைந்ததை எண்ணுகையில், நுட்பமெல்லாங்கொண்ட இசைக் கலையின் உச்ச உயர்கருவியே யாழ் என்பது புலப்படும். இதன் நுட்பங்களையும் உயர்பாங்கினையும் அறிய வள்ளுவரின் கேள்வி என்னும் அதிகாரத்தோடு ஒப்புநோக்கி ஆராய வேண்டும்.

கூத்தாட்டு அவை என வள்ளுவர் குறிப்பிடும் அரங்கு இயல், இசை, நாடகம் ஆகிய முக்கலையும் ஒருங்கே நிகழ்தற் குரிய அவையாகும். இதன்வழி இயற்கலை அவை, இசைக்கலை அரங்கு என்பன தனித்தாயும் அன்று இருந்தன என்பதற்குத் தமிழ் இலக்கியங்களில் மிகுதியான சான்றுகள் உள்ளன.

சிலப்பதிகாரம் நடன அரங்கு பற்றி இலக்கணத்தையே இயம்புவதை அதன் உரைவிளக்கம் வழி தெளிவாய் அறியலாம். எனவே, மேலும் ஆராய ஆராய தமிழிசையே உலகின் தாயிசை-முதலிசை என்பதற்குரிய வலிவான சான்றுகள் கிடைக்கின்றன.

உலகின் பிற இசைகளோடு ஒப்பிட இஃது இன்னும் வலிவு பெறும்.

இத்தகைய ஒப்பீட்டு ஆய்வுக்கு அரசும், தமிழகத்து இசைக் கழகங்களும் விரைந்து பணியாற்றுதல் வேண்டும். பயனின்றி மாவட்டந்தோறும் தமிழிசைக் கழகங்களைத் தோற்றுவித்துக் கொண்டு, அதில் புரியாத மொழியிசைகளைப் புலம்பிக்கொண் டிருப்பதில் பயனில்லை.

தமிழகத் தலைநகர் தொடங்கி, பல்வேறு பெருநகர்களில் உள்ள தமிழிசைக் கழகங்களின் பெயரில்மட்டுமே தமிழ் உள்ள தன்றி, இசையில் இல்லை. இத்தகைய போலியான செயல் களினுல் தமிழிசையும் தழைக்காது, பிற இசையும் பிறங்காது. இவற்றையெல்லாம் அறிஞரும், அன்பரும் உணர்ந்து களைதல் வேண்டும். அரசும் இவ்வரும் பணிக்குப் பெருந்துணைபுரிந்து நறும்பயன் விளைவிக்கவேண்டும்.

---

## தமிழா! உன்பெயர்?

⁂ உச்சியில் இருந்து உள்ளங்கால் வரை—உன் உடல் உறுப்புகளின் பெயர் தூயதமிழில் அமைந்துள் ளனவே—உன் பெயர் தமிழா?

⁂ உறையும் ஊர்களை யெல்லாம் உன் முன்னோர் ஒண்டமிழில் படைத்து உவந்துள்ளனரே! அவ்வூரில் உறையும் உன் பெயர் தமிழா?

⁂ உண்ணும் உணவு தரும் உழவுத் தொழில்—அதன் கருவிகள், உடுக்கும் உடைதரும் நெசவுத்தொழில்—அதன் கருவிகள்—இவற்றின் பெயரெல்லாம் தனித் தமிழ்ப் பெயர்களே—இவற்றின் பயனும் உணவை உண்டு, உடையை உடுத்தி உவப்படையும் உன் பெயர் தமிழா?

⁂ இறைவன் இறைவியர் பெயர்கள் எத்துணை இன் றமிழ்ப் பெயர்கள்? அவர்களை மெய்யாக வழிபடும் மேதகவு உடையவனு நீ! உன் பெயர் அவர்கள் கொண்ட இனிய தமிழ்ப் பெயரா? எண்ணிப்பார் தமிழா, எண்ணிப்பார்!

—நலைமணி

# -படி

[தமிழாகரர், பேராசிரியர், முனைவர். சொ. சிங்காரவேலன்,
எம். ஏ., பிஎச். டி., டிப், மொழியியல்
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.]

1. பின்வரும் தொடர்களைப் பேச்சுத் தமிழில் இன்று பெருவாரியாகக் காணலாம் :

(1) எப்படிச் சொன்னான் ?

(2) இப்படிச் செய்தால் என்ன ?

(3) அப்படிக் கூறியவர் யார் ?

2. பிற்காலத்து இலக்கியங்களிலும் இவற்றை யொத்த சொல்லாட்சிகள் காணப்படுகின்றன :

(1) ''எப்படி நம்பிவாழ்வேன் கச்சியேகம்பனே'' (பட்டினத்தார்.)

(2) ''வாழும்படியொன்று கண்டுகொண்டேன்''
(அருணகிரிநாதர்.)

(3) ''குருவருளால்,
வைத்தபடியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசலனமாம் தினம்'' (குருஞானசம்பந்தர்.)

(4) ''அவரவருக் குள்ளபடி யீசன் அருளாலே
அவரவரைக் கொண்டியற்றுமானல்''

(5) ''இருந்ததனை இருந்தபடி யிருந்துகாட்டி''
(பரஞ்சோதிமுனிவர்.)

இப்படியேநிற்பன் எந்தைபிரான் கச்சியேகம்பனே''
(பட்டினத்தார்.)

''பட்டாங்கில் உள்ளபடி'' (ஔவையார்—பிற்காலம்)

இவ்வாறு இருவகை வழக்கிலும் வரும் தொடர்களில்—'படி' என்னும் இடைச்சொல் பல நிலைகளில் ஆளப்படுதலைக் காண்கின்றோம்.

2. 1. இப்—படி யீற்றுச்சொல்லின் பொருள் நிலையை நோக்கலாம் :

(1) எப்படியாவது வாழவேண்டும் என்று எண்ணினுன்.

(2) இப்படியே சொல்லிக்கொண்டு போனுல் அதற்கு எல்லே இல்லே.

(3) இப்படியும் அப்படியுமாகத் தலையை ஆட்டினுன்.

(4) மறுபடியும் மழை நன்ருகப் பெய்தது.

'படி' என்பது 'முறை' 'நெறி' என்ற பொருளில் இவ்விடங்களில் (1—4) எல்லாம் வருவதைக் காணலாம். மறுபடியும் என்பதில் மட்டும் மீண்டும் (again) என்ற பொருளில் வழங்குகின்றது. பிற இடங்களில் எல்லாம் முற்கூறிய இரு பொருள்களிலேயே (way, manner) வழங்குகின்றது. 'மற்றபடி' என்ற தொடரும் பேச்சு வழக்கில் உள்ளது. இது வினைமாற்றுப் பொருளில் வரும் 'மற்று' என்ற இடைச் சொல்லினை முன்னே பெற்று வந்த—படியீற்றுச் சொல்லாகும். (on the other hand, on the other side) என்ற பொருள் உடையது. முற்கால இலக்கியங்களில் இச் சொல்லாட்சி இல்லை என்பது குறிக்கொண்டு நோக்கத்தக்கது. —படி என்ற ஈற்று வினையெச்சம் ஒன்றைப் பழந்தமிழ் இலக்கணப் பனுவல்கள் குறிக்கவில்லை.

3. வினையெச்ச வாய்பாடுகளைத் தொல்காப்பியர் பின்வரும் இரண்டு நூற்பாக்களிற் கூறியுள்ளனர்.

''செய்து, செய்யூச், செய்பு, செய்தெனச்
செய்யியர், செய்யிய, செயின், செபச், செயற்கென
அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி''
(தொல்-வினை-31)

''பின், முன், கால், கடை, வழி, இடத்து, என்னும்
அன்ன மரபிற் காலம் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே'' (மேற்படி-32)

இவற்றுள் ஒன்ருகப் படி ஈறு குறிக்கப் பெறவில்லை. ஆனுல், வினையெச்சப் பொருண்மையை இது பெற்றுள்ளமை காட்டப்பட்ட எடுத்துக் காட்டுக்களால் இனிது விளங்கும்.

இதனை இடைச்சொல் என்று கூறல்தகும். இடைச் சொல்லின் இலக்கணம் யாது? பின்வருவது தொல்காப்பியர் வரையறை:

"இடையெனப்படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும்; தமக்கியல் பிலவே" (தொல்-இடை-1.)

4. வினைப்பகுதிகளின் பின்னும், சுட்டு, வினா இடைச் சொற்களின் பின்னும்—படி வருவதும் முற்காட்டப்பட்ட எடுத்துக் காட்டுக்களால் விளங்குவதாகும்.

5. இனி, படிக்கு,—படியிலே,—படியால் என்றும் இது வழக்கில் வருவது காணப்பெறுகின்றது; கல்வெட்டுக்களிலும் இச் சொல் வடிவங்கள் காணப்பெறுகின்றன.

6. கடிதங்களின் முடிவில் கையெழுத்துப் போடுவதற்கு முன்னாக, "இப்படிக்கு" என்று எழுதும் வழக்கம் இன்னும் உள்ளது.

(1) இதனைச் செய்த படியால் இப்படியாயிற்று.

(2) மழை பெய்த படியால் நெல் விளைந்தது.

—என வருவனவற்றுள்ளும் இது வேற்றுமை உருபைப் பின்னே கொண்டு வருதல் தெளியப்பெறும். எனவே, வினைக்கு அடையாகவும் (Verb-modifier) பெயரெச்சம், பெயர், முன்னொட்டுக்களுடன் வரும் நிலையிலும் (Particle with Relative participles, Nouns, and Proclitics) வரும் இடைச் சொல்லாகப்—படி என்பதனைக் கருதலாம்.

இது முற்கால இலக்கியங்களில் இடம்பெறாது காலப் போக்கில், பேச்சு வழக்கிலிருந்து இலக்கிய வழக்கிலும் இடம் பெயர்ந்து வந்து வாழ்வு பெற்றுவிட்டது என்று கொள்ளுவது பொருந்தும்.

[படி—பிரதி, நகல் என்ற பொருளில் வரும் பெயர்ச்சொல்; படி—படிவம்—படிமை; "தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றிப் பல்புகழ் நிறுத்த படிமை யோனே" (பனம்பாரனார் பாயிரம்;)—என வரும் சொல்வேறு. இங்கு எடுத்துச் சிந்திக்கப் பெற்றது—படி' என்னும் இடைச்சொல் வடிவமே; இவ் வேறுபாடு உணரத்தக்கது].

7. 'புதியன புகுதல்' என்பது தமிழ் உத்திகளில் ஒன்று; "கடிசொல் இல்லை காலத்துப் படினே" என்பது தொல்காப்பியர் ஆணை. ஆதலின், புதியதாகப் பொருண்மை பெற்று வழங்கும் —படி யீற்றுச் சொற்களும் தமிழில் வாழ்வு பெற்று விளங்குகின்றன; பேச்சு, எழுத்து ஆகிய இரு நிலைகளிலும் பன்முறை கையாளப்பெறும் பெருமை பெற்றுத் திகழ்கின்றன.

———

# ஆசிரியருக்குக் கடிதம்

அன்புடையீர், வணக்கம்.

'செந்தமிழ்ச் செல்வி' ஆகஸ்ட்டு 1980 இதழில் புலவர் பொன். முனியப்பன் அவர்கள் எழுதியுள்ள 'சிந்து வெளி மொழியும் வட மொழியும்' என்ற கட்டுரையைக் கண்டேன். தமிழுக்குத் தொன்மையும் பெருமையும் சேர்ப்பதுபோல் காட்டி, தமிழ்மக்களிடையே வட மொழியின் பெருமையை நிலைநாட்ட முயலும் திரு. வி. ஜி. இராமச் சந்திரன் போன்றோரைக் குறித்து வரலாற்று ஆய்வாளர் எச்சரிக் கையாக இருக்கவேண்டு மென்ற அவருடைய கருத்து காலத்தை உணர்ந்து வெளியிடப்படும் ஒன்று. வானியல் ஆய்வின் முடிவுகள் என்ற பெயரில் பொதுமக்களைக் குழப்புவதும், அதைக் கொண்டு வட மொழித் தொன்மங்களின் கற்பனைக் கதைகளுக்கு வரலாற்று மரியாதை கொடுக்க முயல்வதும், தடம் மாறிய நம் இனம் மேலும் அதே நிலையில் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நிகழ்கின்ற போக்குகள் ஆகும்.

இந்த இடத்தில் கட்டுரையாசிரியரின் கவனத்திற்குச் சரியாக எட்டாத ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். 1-2-1978-ல் கோவை யில் பாரதிய வித்யாபவன் செயல்படும் கட்டிடத்தில், திரு. வி. ஜி. இராமச்சந்திரன் என்பவர், "Bharat, the cradle of man and south india, the cradle of civilisation" என்ற பொருள்பற்றிப் பேசுவார் என்ற அறிவிப்பைக் கண்டு ஆவலாகப் போனேன். தென்னிந்தியா எவ்வாறு நாகரிகத்தின் தொட்டில் என்பதை மெய்ப்பிக்க அவர் ஒரு சொல்கூடச் சொல்லவில்லை. மாறாக, இருக்குவேதம் உலக நூல்கள் எல்லாவற்றிலும் காலத்தால் முந்தியது என்றும், வடமொழி தேவர் மொழி யென்றும், அகத்தியர் என்ற பிராமணர் தமிழைப் படைத்தார் என்றும், அதில் யாதவர் பேசிய மொழியும் இன்னொரு மொழியும் (எது எனச் சரியாக நினைவில்லை) கலந்து இருக்கின்றன என்றும், ஸ்வயம்பு மனு முதலில் படைக்கப்பட்ட மனிதன் என்றும் அளந்தார்.

இவற்றிடையே, ஆரிய - திராவிட இன வேற்றுமை கிடையாது எனக் கூறவந்து, ஆரியம் என்ற சொல் தர்மத்தில் உயர்ந்தவர் என்ற பொருளைத்தரும் என்றும், திராவிடர் என்பது தருமத்தில் தாழ்ந்து தெற்கு நோக்கிக் குடியேறியவர்களைக் குறிக்கும் என்றும், த்ரு (?) என்ற சமஸ்கிருதச் சொல் வீழுதல் (தாழ்தல்) என்ற பொருளுடைய தென்றும், அதிலிருந்து திராவிடர், திராவிடம் என்பவை பிறந்தன வென்றும், இந்தியாவின் வரைபடத்திற் கூட ஆரிய வர்த்தம் மேலேயும், திராவிடம் கீழேயும் இருக்கிறதென்றும் திருவாய் மலர்ந்தார்.

பொய்யுரை கூறி மக்களை மயக்கும் பொழுது கூட, thrown down (through down?) போன்ற நம்மவருக்கு விளங்கக் கூடிய சொற்களைப் பயன்படுத்தாமல், நம்மால் உண்மையான பொருளை எளிதில் அறிந்து கொள்ள இயலாத, பலுக்கலைக் கூடச் சரியாக நினைவில் வைத்துக் கொள்ளக் கடினமான, த்ரு முதலிய வடமொழிச் சொற்களைப் பயன் படுத்துவது ஆகிய தந்திரங்களை ஒரு நுண்கலையாக வளர்த்துக் கொண்டுள்ளவர்களிடமிருந்து தமிழ்நில — மொழி வரலாறு மீள்வது, என்றோ?

தங்கள் உண்மையின்

கு. வெ. கி. ஆசான்

க. மு. (பொருள்) க. மு. (அரசு)

க.மு. (வர), க.மு. (மெய்) க.இ.

# பன்மொழிப் புலவர், பேராசிரியர்,
# பர். தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் மறைவு

பன்மொழிப் புலவரும், பல்கலை வல்லுநரும், பல்துறை அறிஞரும், சிறந்த ஆராய்ச்சியாளரும், பண்டாரகரும் பேச்சிலும் எழுத்திலும் பேராசானாக விளங்கியவருமான தமிழறிஞர், முனைவர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரவர்கள் 27-8-80இல், மதுரையில் தமது 80ஆவது அகவையில், இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து, ஆற்றொணாத் துயரெய்துகின்றோம்.



திரு. தெ. பொ. மீ. அவர்களின் வரலாறு, புகழ் மிக்கதொரு வரலாறாகும். தமிழ்த் துறையாயினும், பிறமொழித் துறையாயினும், அரசியல் துறையாயினும், கலைத் துறையாயினும்—எத் துறையினை எடுத்துக்கொண்டாலும், திரு. தெ. பொ. மீ. அவர்களின் பெயரும் புகழும் இடம் பெறாத துறை இல்லை எனில், அது மிகையாகாது.

1901ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 8ஆம் நாளில், சென்னைச் சிந்தாதிரிப் பேட்டையில் திரு. பொன்னுசாமிக் கிராமணியாரின் திருமகனாராகத் தோன்றிய இவர், சென்னைக் கோவிந்தப்ப நாயக்கர் நடுநிலைப் பள்ளியில் கல்வி கற்கத் தொடங்கிப், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளியில் உயர்நிலைக் கல்வி பெற்றுத் தமது 15ஆம் அகவையில், பள்ளி இறுதித் தேர்வில் வெற்றி பெற்றார். அபிதான சிந்தாமணி ஆசிரியர் திரு. சிங்காரவேலு முதலியாரவர்களும், பேராசிரியர் கா. ர. கோவிந்தராச முதலியாரவர்களும் இவர்கட்கு இளமையில் நற்றமிழ் ஆசிரியர்களாக அமைந்து தமிழறிவூட்டினர்.

பின்னர்ப் பச்சையப்பன் கல்லூரியிற் சேர்ந்து பயின்று, 1920இல் பி. ஏ. பட்டம் பெற்றனர். கலைக் கல்வி பெற்ற இவர் சட்டக் கல்லூரியில் சேர்ந்து சட்டம் பயின்று, 1922இல் பி. எல். பட்டமும் பெற்றார். அவ்வளவில் நில்லாது மேலும் கலை பயின்று 1923இல் எம். ஏ. பட்டம் பெற்றார்.

இவர்தம் தந்தையார் பொன்னுசாமிக் கிராமணியார், சிறந்த தமிழ்ப் பற்றாளரும் இறையன்பு உடையவருமாவார். இவர்தம்

தமையனார் திரு. தெ. பொ. கிருட்டிணசாமிப் பாவலர் சிறந்த நாடக ஆசிரியராகவும், நாட்டுப் பற்றுளராகவு மிருந்தார். இவற்றால் இவர்க்குத் தமிழ்ப் பற்றுடன் இறை அன்பும் நாட்டுப் பற்றும் ஒருங்கே அமைய நல்வாய்ப்புகள் ஏற்படலாயின.

திரு. தெ. பொ, மீ. பட்டம் பதவிகளைப் பெற்றுப் பொருள் தேடுவதே குறிக்கோளாகக் கொள்ளாமல், பொது வாழ்க்கையிலும் ஈடுபட்டுப் பல நற்பணிகள் ஆற்றியுள்ளார். 1924ஆம் ஆண்டில் சென்னை மாநகர் மன்றத்தில் ஓர் உறுப்பினராகி ஊருக்கு நல்லவை பல செய்தார். பேராயக் கட்சியில் (காங்கிரஸ்) ஈடுபாடு கொண்டு தொழிற் சங்கத் தலைவராக இருந்தும், தாழ்த்தப் பட்டோருக்கு இரவுப்பள்ளி நடத்தியும் பல பொதுநலப் பணிகள் செய்து வந்தார்.

தமிழ்மீது இவர் கொண்ட பற்றால் 1936 ஆம் ஆண்டு முதல் சிந்தாதிரிப்பேட்டை வேதாந்த சங்கத்திற்குத் தலைவராக இருந்து மாணவர்கட்குத் தமிழ்ப் பாடமும், வேதாந்தப் பாடமும் கற்பித்து வந்தார்.

இவர்தம் தமிழறிவின் மாண்பினை அறிந்த இராசா சர் அண்ணாமலை செட்டியாரவர்கள் இவரைத் தமது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவராக அமர்த்தினார். அங்கு இப் பேராசிரியர் 1944 முதல் 1946ஆம் ஆண்டுவரை தமிழ்ப் பணியாற்றி வந்தார். பொதுவாகத் தமிழுக்கும் நாட்டுக்கும் இவர் ஆற்றிய தொண்டுகள் அளப்பில. அவற்றை விரிக்கப்புகின் பெருகும்.

இத்தகைய நற்றமிழ்ப் பேராசிரியர் நம் கழகத்தோடும், கழக ஆட்சிப் பொறுப்பாளர் அவர்களோடும் பல்லாண்டுகளாகத் தொடர்புடையவராவர். கழக விழாக்கள் சிலவற்றுக்குத் தலைமை தாங்கியும், சிலவற்றுக்குத் தமது வாழ்த்தினை வழங்கியும், சில விழாக்களில் கலந்துகொண்டு உரையாற்றியும் இவர் செய்த உதவிகள் மிகப் பல.

இவ் வகையில் சென்னையில் 22—2—1942இல் நடைபெற்ற நற்றிணை மாநாட்டிற்குத் தலைமை தாங்கி அரிய சொற்பொழி வாற்றியுள்ளமை, 13—2—1953இல், நெல்லை அருணகிரி இசைக் கழகத்தின் ஏழாந் தமிழ் விழாவையொட்டி நடைபெற்ற அரசியலறிவுச் சொற்பொழிவுகளுக்கு முன்னுரை வழங்கியமை ஆகியன குறிப்பிடத் தக்கவையாகும். அடுத்து 21—8—1961இல் கழகம் வெளியிட்ட 1008ஆவது வெளியீட்டு விழா மலருக்கு ஆங்கி

லத்தில் வழங்கியுள்ள வாழ்த்துரை ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. அதில்,

"இந் நாடு விடுதலையடைவதற்கு நெடுநாட்களுக்கு முன்பே பாராட்டத்தக்க வகையிலும் முன்னறிவோடும், நாட்டு முன்னேற்றங் கருதி இலக்கியத்திலும் அறிவியலிலும் பல்வேறு நூல்களை அழகிய முறையில் பதிப்பித்து வெளியிட்டுள்ளமை பாராட்டத் தக்கது. அங்ஙனமே அண்மைக் காலமாக இவர்கள் தமிழின் மாண்புகளை ஆங்கில உலகம் அறியச்செய்ய மேற்கொண்டிருக்கும் பணிகள் பாராட்டுக் குரியவை" என்று குறிப்பிட்டுள்ளார்.

1970 இல் நடைபெற்ற கழகப் பொன்விழாவிற்கு அனுப்பிய வாழ்த்துச் செய்தியில், "தமிழோடு தானும் வளர்ந்து தனிச் சிறப்புடைய நிறுவனமாக இன்று விளங்குகிறது சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம்" எனப் பாராட்டியுள்ளார்.

அடுத்து 1973 இல் கழக ஆட்சியாளர் அவர்கட்குப் பவள விழா நடைபெற்றபோது, நம் பேராசிரியர் அவர்கள், ஆட்சிப் பொறுப்பாளர் அவர்களைப் பாராட்டி வழங்கிய கருத்துரையில்,

"அல்லும் பகலும் அயராது உழைத்துத் தமிழை வளர்ப்பதே மூச்சாய்க் கொண்டு வாழ்ந்து வருபவர் தாமரைச் செல்வர், வ. சுப்பையா அவர்கள்" என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறெல்லாம் கழகப் பணிகளையும், கழக ஆட்சியாளர் அவர்களின் தமிழ்த் தொண்டினையும் அவ்வப்போது பாராட்டத் தவறியதில்லை. அன்றியும், கழகம் வெளியிட்ட மலர்கட்குத் தம்முடைய கருத்தோவியங்களையும் வழங்கிவந்துள்ளார். 1968 இல் கழகம் வெளியிட்ட திருவள்ளுவர் திருநாள் விழா மலரில் "திருவள்ளுவரும் இந்நாளைய கல்விக் கொள்கையும்" என்னுந் தலைப்பில் வரைந்துள்ள அரிய கட்டுரை கல்வியாளர்கள் கருத்தூன்றிப் படிக்கவேண்டிய ஒன்றாகும்.

18—1—79 இல் அந்நாள் இந்திய நாட்டின் தலைமை அமைச்சராயிருந்த மொரார்ஜி தேசாய் அவர்கள் தலைமையில், திருவாவடுதுறை மடத்துச் சார்பில் நடைபெற்ற திருவாசக மாநாட்டில், நம் தெ. பொ. மீ. அவர்களுக்குச் "சிவயோகச் செல்வர்" என்னும் பட்டம் வழங்கப் பெற்றது.

நம் பேராசிரியர் அவர்கள் மறைமலையடிகளார் நூல் நிலையத்திற்கு வருகை தந்து பார்வையிட்டு மகிழ்ந்து பாராட்டியதோடு.

"இராமலிங்க அடிகள் முதன்முதல் சொற்பொழிவு செய்த இடத்தில் இந் நூல் நிலையம் இடங்கொண்டதில் ஏதோ ஒரு திருவுள்ளக் கிடக்கை உள்ளது போலும்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

பர். தெ. பொ. மீ. அவர்கள் மதுரைப் பல்கலைக் கழக முதல் துணைவேந்தராக அமர்த்தப்பெற்றபின், 1—9—1969 இல் அவர்கள் நல்லுள்ளத்தின்படி மதுரைப் பல்கலைக் கழகப் பட்ட மளிப்பு விழாவிலே திருமுறைகட்கு ஒளிநெறி, ஒளிநெறிக் கட்டுரைகள் எழுதிப் புகழ்பெற்ற தணிகைமணி செங்கல்வராய பிள்ளை அவர்கட்கு டாக்டர் (D. Litt) பட்டம் வழங்கப்பெற்றது.

இவை அனைத்தையும் உற்றுநோக்குழிப் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கட்கும், கழக ஆட்சிப் பொறுப்பாளர் அவர்கட்கு மிடையே பன்னெடுங்காலமாக இருந்து வந்த உழுவலன்புத் தொடர்பு தெள்ளிதின் விளங்கும். கழக ஆட்சியாளர் அவர்களும் திரு. தெ, பொ. மீ. அவர்களின் கல்வி - அறிவு - ஆற்றல்களைப் போற்றத் தவறியதில்லை. அங்ஙனமே பேராசிரியர் அவர்களின் திரிபாராய்ச்சிகளை அறிஞர்கள் நடுநிலை நின்று சுட்டிக்காட்டிய வற்றையும் செந்தமிழ்ச் செல்வியில் இடம்பெறச் செய்யத் தயங்கிய தில்லை. ஏனெனில் யார்க்கும் நன்ருற்றலுள்ளும் அவரவர் சூழ் நிலைக்கேற்பத் தவறு நேருதல் இயல்பே அன்றோ? தெ. பொ. மீ. அவர்களும் அதற்கு விலக்கானவர் அல்லர்.

எனவே, தமிழ் மொழிக்கும், தமிழ்நாட்டுக்கும் நற்பணிகள் பல ஆற்றி மறைந்த பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்தம் குடும்பத் தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

———

## என்றையோ காண்ப தினி

*கையறுநி லைபாடும் காலமது வந்ததே*
*மெய்யறி தெ. பொ. மீ. மேலார்க்கு—செய்யதமிழ்*
*ஒன்றேயோ ஓங்குபல நாடறிய வாழ்ந்தாரே*
*என்றேயோ காண்ப தினி.*

மயிலம், ஆ. சிவலிங்கனார்
(உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை.)

## உயர்திரு. தனிநாயக அடிகள் மறைவு

இலங்கைத் தமிழ் மரபில் தோன்றித் தமிழ் மொழியிலும் ஆங்கிலத்திலும் சிறந்த புலமைபெற்றுப் பேச்சாற்றல் எழுத்தாற்றல்கள் கைவரப்பெற்ற அறிஞர் தனிநாயக அடிகள் 1—9—1980 இல் இலங்கையில் தமது 68 ஆம் அகவையில் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தி அறிந்து பெரிதும் வருந்து கிறோம்.



உயர்திரு அடிகளார் இலங் கையில் 2—8—1913 இல் தோன்றினர். யாழ்ப்பாணத்தி லும் கொழும்பிலும் கல்வி பயின்றார். பின்னர் மேல்நாடு சென்று ரோம் நகரில் சில காலமும், இலண்டனில் சில காலமும் கல்வி கற்றார். அங்கு இவர் சமயத்துறை யிலும் ஒப்பியல் கல்வியிலும் டாக்டர் பட்டம் பெற்றார். அண்ணா மலைப் பல்கலைக் கழகத்திலும் படித்து எம்.ஏ., எம் லிட்., பட்டங்கள் பெற்றார். இவர் சிலகாலம் திருநெல்வேலி மாவட்டத்தில் ஆசிரிய ராகப் பணியாற்றி வந்தார். பின்னர் 1952 இல் இலங்கைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகத் தொண்டாற்றினர்.

இவர் உலகின் பல்வேறு பகுதிகளில் சுற்றுப்பயணம் செய்து பட்டறிவு கைவரப் பெற்றதோடு, ஆங்கிலம், இத்தாலி, இலத்தீன், பிரஞ்சு, ஸ்பானியம், செருமன் ஆகிய மொழிகளில் சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தார். அத்துடன் போர்த்துகீசியம், ஈப்ரு, கிரேக்கம், சமக்கிருதம், சிங்களம் ஆகிய மொழிகளிலும் ஓரளவு புலமை பெற்றிருந்தார்.

இவர் தமிழில் பல அரிய கட்டுரைகளை எழுதியுள்ளார். கழகத்திடமும் கழக ஆட்சியாளரிடமும் இவர் மிகுந்த பற்றுக் கொண்டிருந்தார். ஆட்சியாளர் அவர்களின் பவள விழாவின் போது இவர் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்தியில் கழகப் பணிகளைப் பெரிதும் பாராட்டி யிருந்தமை குறிப்பிடத்தக்கது.

இத்தகைய தமிழ் அறிஞரின் மறைவு தமிழ் இலக்கிய உலகிற்குப் பேரிழப்பாகும். மறைந்த அடிகளாரின் உற்றார் உறவினர்கட்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரி வித்துக் கொள்ளுகிறோம். அடிகளாரின் இன்னுயிர் இறையடியில் இன்புறுவதாக.

———

# தமிழ் வளர, வாழச் சில வழிகள் :

[புலவர். வி. பொ. பழனிவேலனர்.]

க. தமிழில் எழுதும்போதும், பேசும்போதும் பிறமொழிச் சொற்கள் கலக்காமலிருத்தல் வேண்டும்.

உ தமிழ்நாட்டுப் பணிமனைகளில் பணிபுரியும் மைய, மாநில அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழ்ப்புலவர் பட்டம் பெற்றவராயிருத்தல் வேண்டும்.

ங. தமிழ்நாட்டு ஆட்சிமொழி தமிழாயிருப்பதால் அரசுத் திணைக்களங்கள் அனைத்திலும் தமிழிலேயே எல்லா நடவடிக்கைகளும் நடைபெறல் வேண்டும்.

ச. அனைத்துக்கோயில் வழிபாடுகளும் தமிழிலேயே நடத்தல் வேண்டும்.

ரு. தமிழ்நாட்டிலுள்ள கோவில்களின் பெயர்களும், கடவுளர் பெயர்களும் தமிழில் இடப்படவேண்டும்.

சு. தமிழ்நாட்டு ஊர்ப்பெயர்களும், தெருப்பெயர்களும் தமிழிலேயே சூட்டப்படவேண்டும்.

எ. தமிழ்மக்கள் யாவரும் தம்பெயர்களையும், தம்மக்கள் பெயர்களையும் தமிழில் இடவேண்டும்.

அ. தமிழில் நூல்கள் எழுதுவோர் பிறமொழிச் சொற்கள் கலவாமல் எழுதுதல் வேண்டும். தெரியாதவர்கள் தெரிந்துகொள்ளவேண்டும்.

சு. செய்தித்தாள்கள் வெளியிடுபவர் வேற்றுமொழிச் சொற்கள் கலக்காமல் தூயதமிழில் செய்திகளை வெளியிடவேண்டும். தமிழ்க்கொலை செய்வதை நிறுத்த வேண்டும்.

௧௦. தமிழர் தம் இல்லப்பெயர்கள், தொழில் நிறுவனங்களின் பெயர்கள், கடைகளின் பெயர்கள் முதலியவற்றைத் தமிழிலேயே இடுதல்வேண்டும்.

கக. தமிழர் ஒருவர்க்கொருவர் உரையாடும்போது தம் தாய் மொழியாகிய தமிழிலேயே(தூயதமிழில்) உரையாட வேண்டும்.

௧௨. தமிழ்நாட்டிலுள்ள வானொலி நிலையங்களில் நடை பெறும் நிகழ்ச்சிகள் யாவும் பிறமொழி கலவாத தமிழில் நடைபெறச் செய்தல்வேண்டும்.

௧௩. தமிழ்நாட்டிலுள்ள தொடக்கப்பள்ளிகள், நடுநிலைப் பள்ளிகள் அனைத்திலும் ஒவ்வொரு தமிழாசிரியர் கட்டாயமாக அமர்த்தம் செய்யுமாறு அரசு ஆணையிட வேண்டும்.

௧௪. ஆங்கிலநாட்டுக் கலைக்களஞ்சியத்தைத் தமிழில் மொழி பெயர்த்தல் வேண்டும் (அரசு)

௧௫. தமிழ்நாட்டுச் சட்டங்கள் யாவும் தமிழாக்கப்பட வேண்டும்.

௧௬. தமிழ்நாட்டிலுள்ள அரசு அலுவலகங்கள் அனைத் திலும் அனைத்து நிகழ்ச்சிகளும் தமிழிலேயே நிகழ்த்தப் படவேண்டும்.

---

## ஆலமர ஆசான்

### [செல்வக் கண்ணன்]

ஆடிக்காற்றோ இல்லை; அசையும் தென்றல் காற்றே அசைந்த!
ஆயினும் என்ன?
பற்றற நின்ற துறவியைப் போலப் பழுத்து முற்றிய ஆலின் இலைகள்
பரவி வீழ்ந்தன.
வீழும் இலைகளின் விம்மிதம் என்னே! விளம்புதல் கேட்க;
"நீரிடைப் படினும் படுவோம்; அன்றி
நிலத்திடைப் படினும் படுவோம்; அன்றித்
தீயிடைப் படினும் படுவோம்;
எமக்கென் றுயதாம் விருப்போ வெறுப்போ இல்லை;
ஊழ்வழி ஆக"

ஆம்! ஆம்! உடலச் சுமையை எளிதில் உதறி
உயிரார் ஓடும் நாளில்
அதனை எவ்வழி விடுத்தால் என்ன?
சுடினும் என்ன? இடினும் என்ன?
விடினும் என்ன? விரைக்கினும் என்ன?
உடலார்க் கெல்லாம் ஒன்றே!

மெய்ப்பொருள் கருத்தை மிகத்தெளி விக்கும்
மேதகும் ஆசான் ஆல மரமே!
இதனைக் கல்லார், கல்லால் குருமணிக் காட்சியைக் காட்டிக்
கதைப்பதால் காணும் பயன்தான் என்னே!

---

# கீழ்க்குடைவரைக்கோயில், திருச்சி

[தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்,

*இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை) திருநெல்வேலி ]*

திருச்சியில் இரண்டு குடைவரைக்கோயில்கள் உள்ளன. ஒன்று உச்சிப்பிள்ளையார் கோயிலுக்குச் செல்லும் வழியில் உள்ள லலிதாங்குர பல்லவ கிருகம். மற்றொன்று மலைமீதுள்ள வீதியில் தென் மேற்கு மூலையில் உள்ளது.

மலையின் சரிவில் தெற்கு நோக்கிக் குடைவரை உருவாக்கப் பட்டுள்ளது. முகப்பில் 4 தூண்களும், 2 அரைத் தூண்களும் காணப்படுகின்றன. தூண்கள் கீழே சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டை கொண்டனவாகவும், மேலே தாடி, கவசம் போன்ற உறுப் புக்களை உடையனவாகவும் அமைக்கப்பட்டுள்ளன. குடைவரையின் முன்னால் மரவிட்டம் போன்று கல்லிலே அமைந்துள்ள வேலைப் பாடு காணத்தக்கது. விட்டங்களின் நுனியில் பூதகணங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. தூண்களுக்கு இடையில் வட்டமான போதிகைகள் அமைக்கப்பட்டுள்ளன.

முகப்பிற்கும் அரைத் தூண்களுக்கும் இடையில் இரு வாயிற் காப்போர் இரு கைகளுடன் மானிட வடிவில் (பல்லவர் பாணியில்) செதுக்கப்பட்டுள்ளனர். இவர்கள் இருவரும் சமபங்க நிலையில் சாய்ந்தவாறு இல்லாது (மகேந்திரவர்மன் பாணியில் இல்லாது) நேராகப் பார்க்கின்றனர். இவர்களது மார்பில் அரவம் முப்புரி நூலாகக் காட்சி அளிக்கிறது.

மண்டபத்தின் உள்ளே இருமருங்கும் இருகருவறைகள் உள்ளன. தென்னார்க்காடு மாவட்டம் தளவனூர் சத்ருமல்லன் குடைவரைக்கோயில் மற்றும் மாமல்லபுரம் மகிஷாசுரமர்த்தினி குடைவரைக்கோயில் ஆகிய இரு குடைவரைகளில் மட்டுமே கருவறைக்குமுன் தூண்களுடன் கூடிய சிறிய அளவிலான முகமண்டபம் உள்ளது. ஆனால், இங்கு இரு கருவறைக்கு முன்பும் இருமுகமண்டபங்கள் அமைந்துள்ளமை தனிப்பெருஞ் சிறப்பாம்.

மண்டபத்தின் மேற்பகுதியில் உள்ள கருவறையில் எந்தத் தெய்வத் திருவுருவும் இல்லை. கருவறையின் இருமருங்கும் வாயிற்

காப்போர் இருவர் பல்லவர் பாணியில் சாய்ந்த நிலையில் காணப் படுகின்றனர். ஒரு கை கதையின்மீதும் மற்றொரு கை தொங்கிய நிலையிலும் (தண்ட அல்லது கஜஅஸ்தம் எனப்படும்) உள்ளன. கதையை அரவம் பின்னியிருப்பது காணப்படுகிறது. கருவறைக்கு முன் 2 தூண்கள் மற்றும் 2 அரைத் தூண்களுடன் கூடிய அதிஷ்டானம் உள்ளது. முகப்பில் உள்ள தூண்களைப் போன்றே இங்கு உள்ள தூண்களும் தாடி, கவசம் போன்ற உறுப்புக்களைக் கொண்டு உள்ளன. கூடுகளுடன் கூடிய கபோதம் மேலே அமைக்கப்பட்டுள்ளது. முக மண்டபத்தின் முன் வரிசையிலும் கவசம், தாடி போன்றவற்றை உடைய தூண்கள் உள்ளன. கந்தர்வர்கள் தலைகளுடன் 2 கூடுகள் கொண்ட கபோதம் மேலே உருவாக்கப்பட்டுள்ளது. மண்டபத்திற்குச் செல்லும் படிக்கட்டிற்கு இரு பக்கமும் பூதங்கள் காணப்படுகின்றன. கூடுகள் பல்லவர்கள் பாணியிலும் இல்லை. முற்காலச் சோழர்கள் பாணியிலும் இல்லை; இடைப்பட்ட நிலையில் உள்ளன.

கீழ்ப்பகுதியில் உள்ள கருவறையும் சிற்சில மாற்றங்களைத் தவிர மேல் பகுதி கருவறையைப் போன்றதே. வடபுறம் உள்ள வாயிற்காப்போர் ஒரு கையை வாயின்மேலும், மற்றொரு கையைத் தொடையின்மீதும் வைத்துள்ளார். ஒரு காலைத் தரையிலே ஊன்றி, மற்றொரு காலை மடக்கி ஓர் அசுரன் தலைமீது வைத்துள்ளார். பிற்காலத்தில் வாயிற்காப்போரின் காலடியில் சிங்கமோ அல்லது பாம்போ அமைக்கும் வழக்கம் ஏற்பட்டது. இவ்வாறு ஓர் அசுரன், வாயிற்காப்போரின் காலடியில் அமைக்கப்பட்டிருப்பது வேறு எங்கும் காண்பது அரிது. தென்புறம் உள்ள வாயிற்காப்போரின் ஒரு கை இடையில் ஊன்றியும், மற்றொரு கை தொங்கிய நிலையிலும் உள்ளன.

கருவறையின் உள்ளே கார்மேகச் செங்கண் திருமால் 4 கைகளுடன் சமபங்க நிலையில் காணப்படுகிறார். பின் வலக்கையில் தாமரைப் பூவும் முன் வலக்கை அபய முத்திரையுடனும், பின் இடக்கையில் சங்கும், முன் இடக்கை இடுப்பில் ஊன்றியும் அமைந்துள்ளன. இடப்புறம் வலக்கையில் பூவும், இடக்கை இடுப்பில் வைத்தும் கீழே உட்கார்ந்த நிலையில் இருப்பது திருமகளாக இருக்கலாம். வலப்புறம் கீழே உட்கார்ந்த நிலையில் உள்ள வடிவம் இடக்கையில் தாமரையும், வலக்கையைத் தொடை மீது வைத்தும் காணப்படுகிறது. இருமருங்கும் மேலே தேவர் இருவர் உள்ளனர். அவர்களுடைய ஒரு கை இடுப்பில் ஊன்றிய நிலையிலும், மற்றொரு கை துதிப்பதைக் காட்ட மேலே தூக்கிய நிலையிலும் உள்ளன.

மண்டபத்தின் பின்சுவரில் 5 புதை சிற்பங்கள் உள்ளன. பின் சுவருக்கும் கருவறைகளுக்கும் இடையில் உள்ள பகுதிகளில் இரு வாயிற்காப்போர் செதுக்கப்பட்டுள்ளனர். அவர்கள் குறுகிய கால்களுடனும், தொந்தியுடனும், சமபங்க நிலையில் இரு கைகளை இடுப்பில் ஊன்றியவாறு காணப்படுகின்றனர்.

பின் சுவரில் முதலில் 4 கைகளுடன் நின்ற நிலையில் விநாயகர் அமைக்கப்பட்டுள்ளார். அடுத்த வடிவம் சிவபெருமான் என்பர் சிலர், முருகன் என்பர் மற்றும் சிலர். இவர் 4 கைகளுடன் சமபங்க நிலையில் காணப்படுகிருர். மேல் புறமாக உள்ள கருவறையில் இலிங்கத்திருவுரு வைப்பதற்கு ஏற்பக் குழி காணப் படுவதால், இந்த வடிவை முருகனுகக் கொள்வதே பொருத்த மாகத் தோன்றுகிறது. இவ் வடிவங்களுக்கு இருமருங்கிலும் இரு பூதங்களும், மேலே பறந்த நிலையில் இரு தேவர்களும் அமைந் துள்ளனர். அவர்களுக்கு இரு கைகளே உள்ளன. அடுத்து 4 கைகளும் 3 தலைகளும் உடைய பிரமதேவர் செதுக்கப்பட்டுள்ளார். மேல் வலக்கையில் அக்கமாலையும், மேல் இடக்கையில் தாமரை மலரும், கீழ் இடக்கை இடுப்பில் ஊன்றியும் உள்ளன. அடுத்து இருப்பவர் இந்திரனு அல்லது சூரியனு என்பதில் கருத்துவேறுபாடு உள்ளது. இந்த வடிவின் தலைக்குப் பின்னுல் ஒளி மண்டலம் அமைக்கப்பட்டிருப்பதால், சூரியனுகக் கொள்ளலாம். இவர் சமபங்க நிலையில், 4 கைகளுடன் காணப்படுகிருர். பிரமதேவர் மற்றும் சூரியன் ஆகிய இருவருக்கும் இருமருங்கின் கீழே உட்கார்ந்த நிலையில் இருதேவர்களும், மேலே பறந்த நிலையில் இரு தேவர்களும் அமைந்துள்ளனர். அவர்கள் யாவருக்கும் இரு கைகளே உள்ளன. கடைசியாக உள்ளது 4 கைகளுடன் சமபங்க நிலையில் உள்ள கொற்றவையாம். கீழே உட்கார்ந்த நிலையில் இரு கைகளுடன் இருவர் காணப்படுகின்றனர். அவர் களில் வலப்பக்கம் உள்ளவர் தம் கையில் உள்ள கத்தியால் தம் தலையை வெட்டிப் பலியிடுவதாகக் காட்டப்பட்டுள்ளார். வலப் பக்கத்தில் மேலே பறந்த நிலையில் உள்ளவர் இரு கைகளுடன் உருவாக்கப்பட்டுள்ளார். இடப் பக்கம் உள்ள உருவம் சரியாகச் செதுக்கப்படவில்லை.

தமிழகத்தில் குடைவரைகளைத் தோற்றுவித்த மகேந்திரவர்மன் காலத்தில் பருமனுகவும் மற்றும் சதுரம், எட்டுப்பட்டை கொண் டனவாகவும் உருவாக்கப்பட்ட தூண்கள் அவனுடைய மைந்தன் மாமல்லன் காலத்தில் அழகுடன் கவசம், தாடி போன்ற உறுப்புகள் கொண்டவையாக வளர்ச்சி பெற்றன. எனவே இங்குள்ள குடைவரை மாமல்லன் பாணியில் அமையப் பெற்றதாகக்

கொள்ளப்படுகிறது. மேலும் மாமல்லன் காலத்திய ஏனைய குடைவரைகளைப் போன்றே இங்கும் சிற்பத்திற்கு அதிகக்கவனம் செலுத்தப்பட்டுள்ளது. மாமல்லன் பாணியில் உருவாக்கப்பெற்ற குடைவரைகள் மாமல்லபுரத்தில் மட்டுமே காணப்படுவதாகச் சொல்லப்படுகிறது. எனவே தொண்டை மண்டலத்திற்கு வெளியே அத்தகு அமைப்பினை இக் குடைவரைக்கோயில் கொண்டுள்ளது. இதன் தனிப்பெருஞ் சிறப்புகளில் ஒன்ருகும். இதுவும் அன்றிக் கருவறையில் காத்தற் கடவுளாம் திருமாலின் வடிவும், பரிவாரத் தேவதையாகச் சூரியனின் வடிவும் இங்குப் புதை சிற்பங்களாக அமைக்கப் பெற்றிருப்பதும் குறிப்பிடத்தக்கதாம்.

''கருந்தலை
வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென
நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்
குயிர்ப்பலி யுண்ணும்''　　(சிலப் ரு-அ௬-அஎ)

என்பது சிலப்பதிகாரம்.

கலிங்கத்துப்பரணியிலும் செயங்கொண்டார்,

''அடிக்கழுத்துடன் சிரத்தை அரிவராலோ
அரிந்தசிரம் அணங்கின்கை கொடுப்பராலோ
கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவுமாலோ''

என்று குறிப்பிடுகிருர். வெற்றிக் கடவுளாம் கொற்றவைக்குப் பலி கொடுக்கும் இப் பழக்கம் பல்லவர் காலத்தும் இருந்தது என்பதற்கு இங்குக் கொற்றவைக்குப் பலிகொடுப்பதாக உள்ள சிற்பம் சான்று பகர்கிறது.

ஐந்து கையானைக் குறிப்பிடும்போது முற்காலப் பல்லவர் சின்னங்களில் அவரது வடிவம் இல்லை என்றும், மாமல்லபுரத்தில் உள்ள இராமானுச மண்டபத்தில் மட்டுமே கணங்களுக்குத் தலைவனுக (கணம்+பதி) முகப்பில் உள்ள கபோதத்தின் கீழ் அமைக்கப்பட்டதாகவும், பிற்காலப் பல்லவர்கள் கோயில்களில்தான் அவர் பரிவார தேவதையாகக் காணப்படுகிருர் என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர். இந் நிலையில் இங்கு அமையப்பெற்ற விநாயகரின் வடிவும் ஏனைய வடிவங்களும் பிற்காலப் பல்லவர்களைச் சார்ந்தவையா என்பது ஆராய வேண்டிய ஒன்ரும்.

மாமல்லன் பாணியில் குடைவரைக்கோயில்கள் கி. பி. 640 முதல் 674 வரை அமைக்கப்பெற்றனவாகக் கருதப்படுவதால், இந்தக் குடைவரையை 7ஆம் நூற்ருண்டைச் சார்ந்ததாகக் கொள்ளலாம்.

———

# தமிழ் அறிஞர் பெருமக்களுக்கு
# வேண்டுகோள்

பேரன்புடையீர்.

வணக்கம். கடந்த ஐம்பத்து நான்கு ஆண்டுகளாகச் செந்தமிழ்ச் செல்வி, தமிழ் இதழ் உலகில் தனக்கெனத் தனிப் பெயரும் புகழும் நாட்டிச் சிறந்த இலக்கியப் பணி ஆற்றி வருகின்றது. மறைத்திரு. மறைமலையடிகளார் வழி நின்று தமிழ், மொழி, சமயம், இலக்கியம், வரலாறு போன்ற பல துறைகளில் தனித்தமிழாலாய அரிய கட்டுரைகளைச் செல்வி தாங்கி வந்துள்ளது.

இதன் அருமை பெருமைகளை நம் நாட்டார் மட்டுமன்றி மேனாட்டறிஞர்களும் போற்றிப் புகழ்கின்றனர் என்பதற்குச் சான்றாக அண்மையில் அமெரிக்கா நாட்டிலுள்ள பல்கலைக் கழகங்கள் பலவற்றிற்கு உதவும் ஆய்வு மைய நூலகம் இதுகாறும் வெளிவந்துள்ள செல்வி முழுவதையும் தொடக்க முதல் படச் சுருளில் (Micro film) பதிந்துள்ளது என்ற மகிழ்ச்சி தரும் செய்தியைக் குறிப்பிட விரும்புகிறேன். அந்நூலகம் முதல் 14 தொகுதிகளையும் 4 சுருள்களில் பதிவு செய்து நம் மறைமலையடிகள் நூல் நிலையத்திற்கும் ஒருபடி அனுப்பியுள்ளது. எஞ்சியவை தொடர்ந்து வரும். நம் நாட்டில் பல்கலைக்கழக ''டாக்டர் பட்ட'' ஆய்வுக்குச் 'செந்தமிழ்ச் செல்வி' தொகுதிகள் பயன்படுத்தப்பெறுகின்றன.

இத்தகைய அரிய இதழைத் தொடக்க முதல் இதுகாறும் சீரும் சிறப்புமாக நடத்தி வந்தவர் கழக ஆட்சியாளரான செந்தமிழ்ச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் ஆவார்கள். அகவை முதிர்வின் காரணமாக அவர்கள் அப் பணியில் தொடர்ந்து ஈடுபட இயலாத நிலையில் அப்பொறுப்பினை என்னிடம் ஒப்படைத்துள்ளனர். பொறுப்பு மிகப்பெரியதுதான்; இருப்பினும் தமிழன்பர்கள், சான்றோர்கள் வாழ்த்துடன் அதனை ஏற்றுக் கொண்டுள்ளேன். எனவே, இதுகாறும் 'செல்வி'யின் உறுப்பினர்களாயிருந்து ஆதரவு தந்தோர் தொடர்ந்து அவ்வாதரவினை நல்கியும், அறிஞர்கள் ''செல்வி''க்குத் தங்கள் மேலான கட்டுரைகளை 4 அல்லது 5 பக்கங்களுக்கு மேற்படாத அளவில் அவ்வப்போது வழங்கியும் இப் புதிய பணியில் எனக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிக்குமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன். தங்கள் அரிய ஆய்வுக்கட்டுரைகளை அவ்வப்போது எதிர்பார்க்கும்,

அன்பன்
இரா. முத்துக்குமாரசாமி

# செய்திகளும் குறிப்புக்களும்

## நச்சுப் பாம்புகளுடன் வாழும் விந்தை மனிதர்!

கள்ளிக்கோட்டையில் வேலாயுதம் என்பவர், பாம்புகளோடு பழகும் ஒரு முறையைக் கற்று வைத்துள்ளார். இவர் ஒரு கண்ணாடிக் கூண்டுக்குள் 30 நச்சுப்பாம்புகளுடன் வாழ்கிறார். இக் காட்சியைக் காணத் திரளான மக்கள் வருகிறார்கள். இதனால் இவருக்கு நல்ல வருவாயும் கிடைக்கிறது. இப் பாம்புகள் அனைத்தும் நச்சுப் பாம்புகளே என்று மருத்துவர்கள் கூறுகின்றனர். இப் பாம்புகள் இவரைக் கடிப்பதில்லையா என்றால், கடிப்பதுண்டாம். ஆனால், வேலாயுதம் உடனுக்குடன் கடிபட்ட இடத்தில் ஒருவகை மருந்து போட்டுக்கொள்வதோடு, உள்ளுக்கும் மருந்து உட்கொள்கிறாராம். சென்ற மாத இறுதியில் 19 நாள்கள் அக் கண்ணாடிக் கூண்டில் தொடர்ந்து பாம்புகளுடனிருந்தார். ஆனால் கடந்த 5—9—80 அன்று இவர் ஒருபாம்பினால் கடியுண்டு நஞ்சு தலைக்கேறி மயக்கமுற்ற நிலையில் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். மருத்துவர்கள் ஊசி மூலம் (12 ஊசிகள்) நஞ்சு முறிப்பு மருந்தினை அவர் உடலிற் செலுத்தி அவரைக் காப்பாற்றியுள்ளனர். அவர் இப்போது முழுநலம் பெற்றுவிட்டார். எனினும் மீண்டும் பாம்புகளுடன் வாழத்துவங்கிவிட்டார். மருத்துவர்கள் தடுத்துக் கூறியும் பிடிவாதமாகத் தாம் பாம்புகளுடன் வாழ விரும்புவதாகவும், இதனால் ஏற்படும் விளைவுகளுக்குத் தாமும் தம் குடும்பத்தாரும் பொறுப்பேற்றுக் கொள்வதாகவும் கூறுகிறார். மருத்துவர்கள் அப் பாம்புகளின் நிலை பற்றி ஆராய்ந்து வருகின்றனர். ''குடங்கருள், பாம்போ டுடனுறைந் தற்று'' என்ற வள்ளுவர் வாக்கிற்கு வேலாயுதத்தின் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

## சொல்லாக்க மன்றக் கூட்டம்

22—8—80இல் சென்னை மாவட்ட நடுவண் நூலகக் கட்டிடத்தில், ஆட்சிச்சொற்காவலர் திரு. கீ. இராமலிங்கனார் அவர்கள் தலைமையில் சொல்லாக்கக் கூட்டம் நடைபெற்றது. திரு. கோ. முத்துப்பிள்ளை அவர்கள் ''அறிவிப்புக்களும், அறிவிக்கைகளும்'' என்னும் தலைப்பில் உரையாற்றினார். பின்னர், அத்தலைப்பில் கலந்துரையாடல் நடைபெற்றது. கூட்டத்திற்குத் தமிழன்பர்கள் பலர் வந்திருந்தனர்.

## ''அருந்தமிழ் நூல்கள் அச்சான வரலாறு''
## —தொலைக்காட்சியில் உரையாடல்.

சென்னைத் தொலைக் காட்சி நிலையத்தில் 21-8-80 அன்று இரவு 8-35 மணிக்கு 'வண்ணக் களஞ்சியம்' என்னும் தொடரில் திருவாளர்கள் வானதி திருநாவுக்கரசும், மா. சு. சம்பந்தனும், ''அருந்தமிழ் நூல்கள் அச்சான வரலாறு'' என்னும் பொருள் பற்றி உரையாடல் நடத்தினர்

இவ்வுரையாடல் மிகச் சுருக்கமாகவே இருந்தது, எனினும், இப்பொருள் பற்றிய உரையாடல் மேலும் பட விளக்கங்களுடன் தொடர் நிகழ்ச்சியாக அமையுமாயின் இது பயனுள்ள நிகழ்ச்சியாக இருக்கும்.

## திருச்சி தமிழ்ச் சங்கத்தில் கம்பர் விழா

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் 30-31-8-80 ஆம் நாள்களில் தமிழ்ச் சங்க மன்றத்தில், சங்கத்தலைவர் திரு. இரா. கிருட்டிணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமையில் கவிச் சக்கரவர்த்தி கம்பன் விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. சங்க அமைச்சர் திரு. சா, பெரியசாமி வரவேற்புரை ஆற்றினர். திருச்சி மாவட்டக் காவல் துறைக் கண்காணிப்பாளர் திரு. கு. கணேசன், I.P.S. அவர்கள் தொடக்கவுரை ஆற்றினர். செல்வி. வீ. காமாட்சி, எம். ஏ. கம்பன் படத்தைத் திறந்து வைத்து அரிய உரையாற்றினர். பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை ப. சுந்தரேசன் 'கம்பனின் இசைப் புலமை' என்னும் பொருள் பற்றிச் சிறப்புரை ஆற்றினர். இவ் விழாவினை யொட்டி ஆய்வரங்கமொன்றும் நடைபெற்றது. அதில் பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ் வரவேற்புரை நிகழ்த்தினர். சி. இரா. சந்தானம், B.E. அவர்கள் தொடக்கவுரை ஆற்றினர். டாக்டர் சுப. அண்ணாமலை, புலவர் வை. நடேசன், எம். ஏ, கவிஞர் இளங்கம்பன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். திரு. ஆவி. க. ஆவிச்சி செட்டியார் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## மொரீசியசுத் தீவில் உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாடு

உலகப் பெரும் பண்பாடுகளுள் தமிழ்ப்பண்பாடு நீண்ட நெடிய வரலாற்றினை உடையது. அடுக்கடுக்காகப் பலர் தமிழ்த் திருநாட்டின் மீது படையெடுத்தபோதினும் தமிழர் தம் தமிழ்ப்பண்பாட்டை இன்னும் அழியாது காத்து வருவது போற்றுதற்குரியதாகும். 'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்ற முதுமொழிக் கிணங்கத் தமிழர்கள் அலைகடலுக்கப்பால் சென்று பல்வேறு நாடுகளில் வாழ்ந்து வருகின்றனர். எனினும் தமிழ்ப்பண்பாட்டை மறவாது போற்றி வருகின்றனர். ரீயூனியன், மொரீசியசு, மலேயா, சிங்கை, இலங்கை போன்ற பல நாடுகளில் பல தலைமுறைகளுக்கு முன்னரே சென்று ஆங்காங்குக் குடியேறிய தமிழர்கள் உள்ளனர். ரீயூனியன், மொரீசியசு போன்ற தீவுகளில் வாழ்கின்ற தமிழர்களில் பெரும்பாலோர் தாங்கள் தமிழ் இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதை அறிந்து வைத்திருக்கிறார் களேயன்றிப் பலர் வீட்டில் பேசுவதுகூடப் பிரெஞ்சு மொழியில்தான் பேசுகின்றனர். இவ்வாறு தாய்மொழியைக்கூட மறந்து வாழும் நிலையில் தங்கள் தமிழ்ப் பண்பாட்டைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆர்வம் மட்டும் குறையவில்லை. ரீயூனியன் தீவைச் சார்ந்த தமிழ் இளைஞர்கள் மாரியம்மன் மீதும் முருகன் மீதுமுள்ள, பாடல்களைப் பிரெஞ்சு எழுத்துக்களில் இயற்றியுள்ளனர்.

"இந்தியாவிலிருந்து மட்டுமன்றி வெளிநாடுகளிலிருந்தும் புகழ் பெற்ற ஆசிரியர்கள் பலர் திருக்குறள் போன்ற அரிய இலக்கியங்களைத் தம்முடைய மொழிகளில் பெயர்த்தெழுதி அவற்றை உலகெங்கணும்

பரவச் செய்துள்ளனர்'' என்று சர்சிலூசாகுர்ராம் கூலன் என்பார் கூறியுள்ளார்.

## கொற்கைத் தமிழ் மன்ற மூன்றும் ஆண்டு நிறைவுவிழா.

கொற்கைத் தமிழ் மன்றத்தின் மூன்றும் ஆண்டு நிறைவு விழா, 15-8-80 முதல் 17-8-80 முடிய மூன்று நாள்கள், ஏரலில் கடலூர் முதுபெரும் புலவர் அ. நடேசமுதலியார் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. புலவர் ச. சிவசங்கு வரவேற்புரை ஆற்றினர். புலவர் க. ஐயாத்துரை ஆண்டறிக்கையினைப் படித்தார். பேச்சுப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்கட்குத் திரு ச. மாரி இராமச்சந்திரன் பரிசுகள் வழங்கினர். பர். வைத்தமாநிதி 'நகரித்தமிழ்' என்பது பற்றிப் பேசினர். ஓய்வுபெற்ற புலவர்களான புலவர் சிவசங்கு, புலவர் காதிறு நயினர் ஆகியோர்க்குத் திரு. நடேசமுதலியார் பொன்னடை போர்த்திச் சிறப்பித்தார். புலவர்கள் வேலாயுதன், பழனியாண்டி, கி. சொ. முத்து, எஸ். பி. முத்து, சு. சண்முகசுந்தரம், நடராசன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். இவ் விழாவினை யொட்டி வழக்காடு மன்றமும் நடைபெற்றது.

## சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழாய்வுக் கருத்தரங்குகள்

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறையின் சார்பில் இத் திங்களில் முறையே 1, 8 15. 22, 29 ஆம் நாள்களில் டாக்டர், ஜே. பார்த்தசாரதி. சிலம்பொலி செல்லப்பன். டாக்டர் பொன். கோதண்டராமன், திரு. அரங்கண்ணல், டாக்டர் கு. மோகனராசு ஆகியோர், முறையே 'ஒப்பு நோக்கில் பாரதியார், திருக்குறளும் புலவர் குழந்தையும், நாட்டுப்புறவியலும் மொழியியலும், அண்ணுவின் நாடகங்களும் திரைப்படங்களும், கலைக்கதிர் வளர்த்த தமிழாய்வு என்னும் பொருள்கள் பற்றிக் கருத்துரை வழங்குவர்.

## முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்களின் 85-ஆது பிறந்த நாள் விழா.

முது பெரும் புலவரும், சிந்தாமணிச் செல்வர் எனப் புகழ் பெற்றவருமான இலக்கணப் பேரறிஞர் திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களின் 85 ஆவது பிறந்த நாள் விழா, சென்னைப் புரசை கங்காதரேசுவரர் கோயில் தெருவிலுள்ள நகராண்மைக் கழக உயர் நிலைப்பள்ளியில் 31-8-80 அன்று மாலை பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந்தாமனர் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. திரு. தி. பாலசுப்பிரமணியம் B. Litt. வரவேற்புரை நிகழ்த்தினர். புலவர்கள் ஆடலரசு, காமாட்சி நாதன் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். புலவர் சங்கர் நன்றி நவில விழா இனிது முடிந்தது. முதுபெரும் புலவர், மே. வீ. வே அவர்கள் மேலும் பல்லாண்டு வாழ்ந்து, தமிழ்த் தொண்டாற்ற எமது உளமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ௫௪-௬௦ஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள்
கழக ஆட்சியாளர் ரூ. 10—00
,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் 5—00
,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை 5—00
,, ஈசுவரனார் திருமகனார் செல்வன் இராமலிங்கம்
திருமண நன்கொடை 5 00
,, Dr. சொல்விளங்கும் பெருமாள் அவர்கள் மதுரை 25 00
,, G. N. Building Contractors Athlone C. P. 100 00

———

## மதிப்புரை

### தணிகை வெண்பா (உரையுடன்)

[பதிப்பாசிரியர் மு. சண்முகம் பிள்ளை தமிழ் விரிவுரையாளர், திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி, சென்னைப் பல்கலைக் கழகம். வெளியிடுவோர்: தி. கி. நாராயணசாமி, 2, சீதாராம் நகர் கடலூர்-607001. விலை: 5-00]

திருத்தணிகைக் கந்தப்பையர் பாடிய திருத்தணிகை வெண்பா என்னும் இந்நூல் உரையுடன் கூடியது. ஆயினும் உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. 1867ஆம் ஆண்டு அச்சுப்படி ஒன்றின் துணை கொண்டு, தமிழ்ப் புரவலர் தி. கி. நாராயணசாமி அவர்கள் இந்நூலினை நன்கு பதிப்பித்து வெளியிட்டிருக்கும் முயற்சி பாராட்டத்தக்கது. இதனை புலவர் மு. சண்முகம் பிள்ளையவர்கள் பதிப்பித்திருக்கும் முறை அதனினும் பாராட்டத்தக்கது. திரு. பிள்ளை அவர்களின் ஆராய்ச்சி முன்னுரையால் இந் நூலின் சிறப்பு நன்கு தெரிகிறது. தமிழ் அன்பர்களும், முருகன் அருள்பெற விழைவோரும் இதனைப் படித்துப் பயன் பெறலாம்.

### கடவுள் வழிபாடு எதற்கு? அதனை எப்படிச் செய்வது?

[ஆசிரியர் தவத்திரு. நா. சின்னைய செட்டியார்: 28 முதல் நாராயணன் தெரு, வள்ளலார் நகர், சென்னை-1 விலை ரூ. 1-50.]

நம் நாட்டு மக்களுக்குக் கடவுள் வழிபாட்டினைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை. அதிலும் சிறப்பாகத் தமிழ் நாட்டில் மக்கள் வாழ்க்கை கோயில், குளம், திருவூர்ப் பயணம், திருவிழாக்கள், நோன்புகள் என்று இன்னபிற சமயச் சடங்குகளிலேயே கழிகின்றது. ஆனால், வழிபாட்டின் அடிப்படை நோக்கம் நிறைவேறும்படியும் வழிபாட்டால் மக்கள் பண்பாட்டுச் சிறப்பெய்தவும் உண்மையான கடவுள் வழிபாட்டுக்கு வழிகாட்டுகிறது இந்நூல்.

---

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்திற்காக
சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| இலக்கிய மலர்கள்—மு மு. இசுமாயில் | 25 | 00 |
| பழந்தமிழர் வீரப்பண்பாடு—கதிர் மகாதேவன் | 30 | 00 |
| நாச்சியப்பன் பாடல்கள்—நா. செல்வம் | 15 | 00 |
| பாரதியும் சமூகமும்—பெ. தூரன் | 12 | 00 |
| இலக்கியத் திறனாய்வியல்—தா. ஏ. ஞானமூர்த்தி | 30 | 00 |
| அணுசக்தியும் ஓம் சக்தியும்—மு. சேகரன் | 7 | 50 |
| சிலம்புச் செல்வரின் தலையங்க இலக்கியம் —மா. இரா இளங்கோவன் | 16 | 00 |
| கம்பர் காட்சி—டாக்டர் ஔவை நடராசன் | 13 | 00 |
| கம்பன் சுவை—கவிஞர் செவ்வேள் | 6 | 00 |
| பிரபந்த தீபம்—டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் | 5 | 00 |
| தெய்வீகச் சிந்தனைகள்—எம். நாராயணவேலுப்பிள்ளை | 7 | 00 |
| மூல நோய்க்கு முறையான மருந்துகள் —டாக்டர் திருமலை நடராசன், R.I.M.P. | 2 | 50 |
| ஆன்மீகமும் அரசியலும் —சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் | 8 | 00 |
| சிலப்பதிகார உரையாசிரியர்கள் சிறப்பு— ,, | 6 | 00 |
| ஔவையார் அருளிச் செய்த கல்வியொழுக்கம் ,, | 3 | 00 |
| வானொலியிலே பூத்த மலர்கள்—டாக்டர் க. வெள்ளிமலை | 5 | 50 |
| சிற்றிலக்கியச் சிந்தனைகள்—கு முத்துராசன் | 15 | 00 |
| பெரிய புராண உரை—சி. கே. சுப்பிரமணிய முதலியார் (1, 2, 3 4, 5 6 தொகுதிகள்) 3வதில் பிற்பகுதியும், 7ம் பகுதியும் நீங்கலாக. | 310 | 00 |
| Pathway to God through The Tiruvaachakam —G. Vanmikanathan | 15 | 00 |
| The First Patriot Veerapandya Kattabomman —Dr. Ma. Po. Si. | 5 | 00 |

### பேராசிரியர் மறை திருநாவுக்கரசு அவர்களின் நூல்கள்

| | | |
|---|---|---|
| மறைமலையடிகள் வரலாறு (1000 பக்கங்கள்) | 50 | 00 |
| பெரியபுராண ஆய்வுரை முதல் தொகுதி (சுந்தரர் வரலாற்றாய்வுரை) | 10 | 00 |
| ,, 2 ஆம் தொகுதி (அப்பர் வரலாற்றாய்வுரை) | 10 | 00 |
| ,, 3 ஆம் தொகுதி (சம்பந்தர் வரலாற்றாய்வுரை) | 10 | 00 |
| ,, 4 ஆம் தொகுதி (60 அடியார் வரலாற்றாய்வுரை) | 10 | 00 |
| சைவமத வினாவிடை | 2 | 50 |

பதிவு எண் : M. 4899

# கழகம் வெளியிட்டுள்ள சொற்பொழிவு நூல்கள்

## சங்க இலக்கியச் சொற்பொழிவுகள்

| | | |
|---|---|---|
| அகநானூற்றுச் சொற்பொழிவுகள் | | 7 50 |
| புறநானூற்றுச் | ,, | (அச்சில்) |
| கலித்தொகைச் | ,, | 6 00 |
| குறுந்தொகைச் | ,, | 7 50 |
| நற்றிணைச் | ,, | 5 00 |
| பரிபாடல் | ,, | (அச்சில்) |
| பதிற்றுப்பத்துச் | ,, | 6 25 |
| பத்துப் பாட்டுச் | ,, | 10 00 |

## சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள்

| | | |
|---|---|---|
| உலா, கலம்பகம், தூது | (முதல் மாநாடு) | 10 00 |
| பிள்ளைத்தமிழ் | (2வது ,, ) | (அச்சில்) |
| பரணி, பள்ளு, குறவஞ்சி | (3வது ,, ) | 10 00 |
| கோவை நூல்கள் | (4வது ,, ) | 10 00 |
| அந்தாதி நூல்கள் | (5வது ,, ) | 10 00 |
| வெண்பா நூல்கள் | (6வது ,, ) | 10 00 |

## பிற சொற்பொழிவு நூல்கள்

| | |
|---|---|
| பெரிய புராணச் சொற்பொழிவுகள் | 15 00 |
| அரசியலறிவுச் சொற்பொழிவுகள் | 5 00 |
| தமிழக வரலாறு சொற்பொழிவுகள் | 10 00 |

## கழகவழி வெளிவந்துள்ள வரலாற்று நூல்கள்

குமரிக் கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு
—பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை 4 00

இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு
—மூலம் : கில்பர்ட் சிலேட்டர்
—தமிழாக்கம்: பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை 7 50

ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் ,, (அச்)

நமது மொழி
—ந. சி. கந்தையா 2 50

தமிழகம் ,, 7 50

தமிழர் யாவர்
—புலவர் கோவிந்தன் 2 50

சேரர் ஆட்சி
-என் கே. வேலன், பி.ஏ, 6 00

சோழர் ஆட்சி ,, 5 00

பாண்டியர் ஆட்சி ,, 6 00

நாயக்கர் ஆட்சி ,, 6 00

பல்லவர் ஆட்சி
சொ. முருகேசனர் 6 00

அப்பர் அச்சகம், சென்னை-1.